# நடந்த கதை

கவிஞர் கண்ணதாசன்

கண்ணதாசன் பதிப்பகம்
12, கண்ணதாசன் சாலை
தியாகராய நகர்
சென்னை - 600 017
Phone : 4332682

ஆறாம் பதிப்பு : நவம்பர், 1995
ஏழாம் பதிப்பு : நவம்பர், 1996
எட்டாம் பதிப்பு : டிசம்பர், 1997

கவியரசர் 65-வது பிறந்ததின நினைவு வெளியீடு

பதிப்பாசிரியர் : காந்தி கண்ணதாசன்

- "**NADANTHA KATHAI**" - Tamil - Social Novel
- Written by : Poet Laureate **KANNADHASAN**
- Eighth Edition : December, 1997
- Publishing Editor : **GANDHI KANNADHASAN**
- Published by : **KANNADHASAN PATHIPPAGAM**
12, Kannadhasan Salai,
Thiyagaraya Nagar.
Chennai - 600 017.
Phone : 433 26 82.
Email : kanna@md2.vsnl.net.in

Laser Typeset : Laser link Systems & Prints Chennai - 17.
Printed at: NOVENA OFFSET PRINTING CO., Chennai - 5 ✆ 8588471, 8548891

### இளைய கண்களுக்கு

நடந்த கதை!

இது உண்மையிலேயே நடந்த கதை !

சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு கவிஞர் பெருமகனைச் சந்தித்த ஒரு முதியவர் தன் வாழ்வில் நடந்தது என்று கூறிய கதை.

இனம் பார்த்தும் குலம் பார்த்தும் பெண்ணெடுக்க வேண்டும் என்று நமது மூதாதையர் கூறியவை எவ்வளவு உண்மை என்பதை நிரூபிக்கும் கதை.

காமத்திற்குக் கண்ணில்லை, காதலுக்கு விவஸ்தை இல்லை என்பது எத்துணை அனுபவ பூர்வமான உண்மை என்பதை இயம்பும் கதை.

தாய் தந்தையரை மதியாது, வாலிப மிடுக்கில், கண்டதும் காதல் என்ற போதை வசப்பட்டுத் தறிகெட்டலையும் இளந் தலைமுறையினருக்கு ஒரு பாடமாக அமையும் என்ற நோக்கில் எழுதப்பட்டது இந்த நாவல்.

உருவம் சிறிதானாலும், இதன் உள்ளடக்கம் விரிவானது. சிந்திக்க வைப்பது.

1976-ஆம் ஆண்டிற்குப் பிறகு, ஏராளமான சிறு நாவல்களைக் கவிஞர் பெருமான் எழுதினார். அந்த வரிசையில் 'நடந்த கதையும்' ஒன்று.

கவிஞர் பெருமகனது 65-ஆவது பிறந்த நாளை நினைவு கூர்ந்து வெளிவரும் நூல்களில் இதுவும் ஒன்று. இதனை வெளியிடும் கவியரசரின் திருமகன் தம்பி காந்தி கண்ணதாசனைத் தமிழகம் பாராட்டும். அதில் நானும் பங்கு பெறுவதில் மகிழ்கிறேன்.

சென்னை
16-6-92

அன்புடன்
இராம. கண்ணப்பன்

One is bound to shed a tear after reading this short story, claimed to have been based on a true event.

It is all about a rustic youngster who comes to indescribable grief for having allowed his passion to rule his head in the matter of choosing his life partner and finally turing to sanyas in utter desperation.

Many others could have had similar fate and yet reconciled themselves to the suffering, blaming their misfortune. Such victims may be provoked to self introspect should they chance to go through this book regretting in silence and agony their rash act of entering the wedlock without bothering to find out the antecedents of their life partners.

- THE HINDU
1-12-1992

# நடந்த கதை

இமய மலையின் தோள்களில் அவன் பாதம் படாத இடமே கிடையாது.

பத்ரிநாதன் கோவிலைச் சுற்றிலும் அலை மோதிக் கொண்டிருந்த சந்நியாசிகளில் கிருஷ்ணானந்தாவை அறியாதவர்களே கிடையாது.

கருப்பும் வெள்ளையும் கலந்து கலந்து காட்சியளிக்கும் அழகான தாடி மலை மேல் நடப்பதற்கு வசதியாக ஒற்றை நாடிச் சரீரம்.

எந்த விதச் சலனமும் சபலமும் இல்லாமல், இறைவனையே தேடி நிற்கும் கண்கள்.

வெளிறிப் போன அந்தக் கண்களில் உள்ள ஒவ்வொரு கோடும், ஓடிப்போன காலங்களின் பிரதிபலிப்புகள்.

நெற்றியில் பூசிய திருநீறு அவனது ஏக்கத்துக்குச் சாட்சி.

இந்த உடம்பும் சீக்கிரம் இப்படி ஆகிவிடக் கூடாதா என்பதே அவனது கவலை.

அவன் உடம்பு சந்நியாசத்தில் இலயித்துவிட்டது. ஆனால், அவன் வீட்டில் விட்டு வந்த நாய் கூடவே வந்து இருதயத்தைக் கடித்துக் கொண்டே இருந்தது.

மனதின் ஆதங்கங்கள் அவனை மனிதனாகவே வைத்திருந்தன.

ஞானியின் பக்குவத்தை அவன் எட்டவில்லை. துறவியின் தூய்மை அவனுக்குக் கிட்டவில்லை.

சிறு வயதில் அவன் கால்களைச் செருப்புக் கடித்திருக்கிறது. ஆனால், இளம் வயதில் யார் யாரோ அவன் இருதயத்தில் விழுந்து காயப்படுத்தி இருக்கிறார்கள்.

இமயத்தின் பனிக்காற்று அவன் உடம்பு சூடேறாமலும், இரத்தம் கொதிக்காமலும், காப்பாற்றி வந்தது.

ஒவ்வொரு சந்நியாசியும் ஒவ்வொரு பாஷையில் இறைவனை அழைப்பான்.

ஆனால், கிருஷ்ணானந்தா ஒற்றைக் காலில் நின்றபடி, இரண்டு கைகளையும் தலைக்கு மேல் தூக்கி 'ஓம் நமசிவாயா' என்று இழுப்பது, கோவில் மணியோசையைத் தொடர்ந்து வரும் அலைகள் போலிருக்கும்.

''கிருஷ்ணானந்தா கலகலப்பாக இல்லை!'' என்பார், சகஜானந்தா.

அத்தனை ஆனந்தாக்களும் ஆனந்தமாகப் பேசும்போது, கிருஷ்ணானந்தாவின் யோசனை, தான் பெற்ற தோல்வியைப் பற்றியே இருக்கும்.

மலைச் சாரலில் பனிக் கட்டிகள் சரிந்து விழும் போதெல்லாம், தன் வாழ்க்கையில் ஏற்பட்ட சரிவுகளே அவன் நினைவுக்கு வரும்.

அவனது கதைதான் என்ன?...

அவன் அதை யாரிடமும் சொன்னதில்லை.

அவனை அறிய முயன்றவர் சகஜானந்தா.

இருவரும் மரத்தால் கட்டப்பட்ட ஒரு சிறிய விடுதியில் தங்கியிருந்தார்கள்.

சகஜானந்தா அவனை விட வயதில் மூத்தவர். சமயங்களில் அவரே சமைத்து அவனுக்குப் பரிமாறுவார்.

திடீர் திடீரென்று இரவு நேரங்களில் அவன் அழுவதை அவர் கண்டிருக்கிறார். ஆயினும் மூலத்தை அறிந்து கொள்ள அவர் விரும்பவில்லை.

ஆனால், அவனுக்குப் பொதுப்படையாக ஆறுதல் சொல்வார்.

விஷயம் தெரிந்தால்தானே விளக்கமாகப் பேச முடியும்.

அன்று இரவு அவனுடைய குமுறலை அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

பொதுவாக அவன் பக்கத்தில் போய் உட்கார்ந்து, தோளில் கையை வைத்தார். அகல் விளக்கைச் சற்றுத் தூண்டி விட்டார்.

''தம்பி, மனதின் சுமைகளை யாரிடமாவது இறக்கி வைத்தால்தான் அழுகின்ற நேரங்கள் குறையும்,'' என்றார்.

கிருஷ்ணானந்தா எழுந்து உட்கார்ந்தான். கண்களைத் துடைத்துக் கொண்டான். அப்படியும் தாங்காமல், ''சுவாமி!'' என்று அவர் மடியில் சாய்ந்தான்.

அவனைத் தட்டிக் கொடுத்துத் திரும்பவும் எழுந்து உட்கார வைத்தார் அவர்.

''தண்ணீர் இரும்பை விடக் கனமானது. ஆனால், இரகசியமோ தண்ணீரைவிடக் கனமானது. அது நெஞ்சுக்குள்ளேயே இருக்கும்வரை நிம்மதி கிட்டாது. சம்சாரி சந்நியாசி ஆவது சில விஷயங்களை மறப்பதற்குத்தான், அது

அவனால் முடியாதென்றால், பகிரங்கமாக இறக்கி வைத்துவிடும் துணிச்சலாவது வேண்டும். என்னை நீ நம்பலாம். உன் இரகசியங்களைக் கேட்டு நான் கேலி செய்ய மாட்டேன். என்னால் முடிந்த ஆறுதலை உனக்கு வழங்குவேன். பகவான் கீதையிலே சொன்னபடி மனதைப் பயிற்சியினால் அடக்க வழியும் சொல்வேன்'' என்றார், சகஜானந்தா.

''சுவாமி! விவஸ்தை இல்லாமல் வாழ்ந்து விட்ட இந்த அப்பாவியின் கதை, நரகத்தின் கதை. இவனது சுய சரிதம் பிறராலேயே நடத்தப் பட்டிருக்கிறது. ஒரு நல்ல மனிதன் எவற்றை யெல்லாம் சிந்திக்கவே பயப்படுவானோ, அவையெல்லாம் இவன் வாழ்வில் நடந்தே முடிந்திருக்கின்றன. அந்த இரகசியங்கள் சொல்லக் கூடியவைதானா? தன்மானத்தின் ஒவ்வொரு அணுவையும் சுட்டெரித்த நெருப்பு என் உடம்பையும் எரித்து விடக் கூடாதா? அக்னி வயிற்றில் இருந்தால் எதையாவது சாப்பிட்டுத் தணித்து விடலாம். அதுவே இருதயத்தில் இருந்தால் எந்தத் தண்ணீருக்கும் அதை அணைக்கும் சக்தி கிடையாதே. சுவாமி! கேளுங்கள், என் நரக வாழ்க்கையை விவரிக்கிறேன். கேளுங்கள்!''

## 2

எனது சொந்த ஊர் தூத்துக்குடி. அங்கே நானும் ஒரு நல்ல குடும்பத்தில் பிறந்தவன்தான்.

என் தகப்பனார் அங்கே ஒரு மில்லில் மேஸ்திரியாக இருந்தார். அவர் பெற்ற சம்பளம் எங்கள் குடும்பத்துக்குப் போதுமானதாகவே இருந்தது.

என் கூடப் பிறந்தது ஒரே சகோதரி

'இரண்டு இப்போது போதும். இரண்டுக்கு மேல் எப்போதும் வேண்டாம்!' என்று விளம்பரம் செய்கிறார்களே, அந்த விளம்பரம் வருவதற்கு முன்னதாகவே என் தந்தை குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்டவர்.

ஆண் பிள்ளை ஒரு பிள்ளையானாலும், அது உருப்பட்டு விடும் என்றுதான் நம்பினார், அவர்.

சின்ன வயதிலேயே எனக்கு இரக்க குணம் அதிகம்.

வீட்டில் இட்லி சுடும்போது, தாய்க்குத் தெரியாமல், அதில் இரண்டு மூன்று எடுத்து என் ட்ரவுசர் பையில் மறைத்துக் கொண்டு போய்ப் பிச்சைக்காரர்களுக்குக் கொடுப்பேன்.

மரத்தடியில் தூங்குகிற குழந்தையைப் பார்த்தால், 'இரக்கப்பட்டு, உனக்கு அம்மா அப்பா கிடையாதா?' என்றெல்லாம் விசாரிப்பேன்.

சமயங்களில் என் தந்தை அதை ஜாடையாகக் கவனித்துக் கண்ணீர் வடிப்பார். என் பிள்ளைக்கு இரக்கமென்றால் இரக்கம் அப்படி இரக்கம் என்பார்.

அளவு கடந்த இரக்கம் தன்னழிவுக்கு ஒரு காரணம் என்பது அப்போது எனக்குப் புரிந்ததில்லை.

படித்தேன். வளர்ந்தேன். பரீக்ஷைகளில் முறையாகவே பாஸ் செய்தேன்.

ஸ்கூல் ஃபைனல் படித்ததே போதும். பையனை எங்காவது வேலைக்குச் சேர்க்கலாம் என்று என் தந்தை கருதினார்.

அவருக்குத் தெரிந்தது மில் வேலைதானே!

தூத்துக்குடி மில்களில் வேலை இல்லை என்று, ஒரு சிபாரிசின் மூலம் சென்னையிலுள்ள ஒரு தொழிற்சாலைக்குக் குமாஸ்தா வேலை பார்க்க அவர் என்னை அனுப்பினார்.

சென்னை நகரம் என்னை ஏற்றுக் கொண்டது.

நாகரிகத்தின் பரபரப்பில் பழைய பண்பாடுகளை மறந்து போய்க் கிடக்கும் சென்னை நகரத்தில் நானும் ஒரு அங்கமானேன்.

வாழ்வது எப்படி என்று தெரியாதவனுக்கு வாழ்க்கையைக் கற்றுக் கொடுப்பதும் சென்னைதான்; வாழ்ந்து கொண்டிருப்பவன் வாழ்க்கையின் மீது வழக்குத் தொடுப்பதும் சென்னைதான்.

இருநூறு ரூபாய் சம்பளத்தில் ஓர் உத்தியோகம். இருப்பிடம் அரண்மனைக்காரத் தெருவில், ஓர் அறையில். வாடகை இருபத்தைந்து ரூபாய்.

அந்தக் கம்பெனிக்குரிய தொழிற்சாலை திருவொற்றியூரில் இருந்தது. கம்பெனி லிங்கிச் செட்டித் தெருவில் இருந்தது.

நான் உத்தியோகத்தில் சேர்ந்த புதிதில் அங்கே பெண் ஊழியர்கள் மிகவும் குறைவாகவே இருந்தார்கள்.

இப்போதுதானே எங்கு பார்த்தாலும் பெண்கள் உத்தியோகம் பார்க்கிறார்கள்!

அப்போது நாங்கள் இருபத்தெட்டு ஊழியர்கள். அதிலே ஐந்து பேர்தான் பெண்கள்.

போனதும் போகாததுமாகக் கடிதங்களைப் பதிவு செய்து கொள்ளப்படும் டெஸ்பாட்சிங் உத்தியோகம் எனக்குத் தரப்பட்டது.

வேலை சுலபம்தான். ஒரு மணி நேரத்தில் முடிந்து விடும். ஆனாலும், வேறு வேலை ஏதாவது பார்த்துக் கொண்டு இருப்பேனே தவிர, அறைக்குச் செல்ல மாட்டேன்.

அங்கிருந்த ஊழியர்களிலே நான்தான் கொஞ்சம் அழகாக இருப்பேன்.

ஒரு பெண், அவளுக்கு என்னை விட வேலை அதிகம்.

பெயர் மோகனா. சம்பளம் முன்னூற்றைம்பது ரூபாய். அவள் தான் அனுப்ப வேண்டிய கடிதங்களை என்னிடம் கொண்டு வந்து கொடுப்பாள். அவள் டைப் அடித்தலும் பாஸ் செய்திருந்தாள்.

எல்லாரிடமுமே சகஜமாகப் பழகுவாள்.

அடிக்கடி முடியைத் திருத்திக் கொள்வாள். மாராப்புச் சேலையை ஒழுங்கு படுத்திக் கொள்வாள்.

'பெண் பறந்து பறந்து பேசினால் அவளை நம்பக்கூடாது' என்பது அப்போது எனக்குத் தெரியாது.

இறைவனின் விதிக் கோடு என்னை அவளிடம் பிணைத்தது.

கண்கள் பேசின; கடிதங்கள் பேசின.

கடற்கரை எதற்காக இருக்கிறது?

ஒரு நாள் என்னை அவள் அங்கே அழைத்தாள்.

வீட்டிலே இரகசியம் பேச முடியாத பலர் அங்கே பேசிக் கொண்டிருந்தார்கள்.

கடற் காற்றை அனுபவிக்க வந்து கடனைப் பற்றியும், கவலையைப் பற்றியும் உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

நானும், மோகனாவும் ஒரு பகுதியில் போய் உட்கார்ந்தோம்.

மாமூலான கதைதான். மனம் விட்டுப் பேசினோம்.

'நீ இல்லாமல் நான் இல்லை!' என்ற அளவுக்கு அவள் போய்விட்டாள்.

பெண் அழகாக இருக்கிறாள். என்னை மிகவும் நேசிக்கிறாள். சம்பளம் ரூபாய் முன்னூற்று ஐம்பது.

இவ்வளவுதான் நான் பார்த்தது. வேறு குலத்தைக் கேட்டேனா? கோத்திரத்தைக் கேட்டேனா?

பெற்றோர் பார்த்துச் செய்யும் புனிதமான திருமணங்களில் அல்லவா அதை எல்லாம் கேட்பார்கள்?

'இளைஞன் கண்களையே நம்புகிறான்' என்றபடி, நானும் கண்களையே நம்பினேன். ஆராய்ச்சியில் இறங்கவில்லை.

அப்பாவுக்குக் கடிதம் எழுதினேன், 'இப்படி ஒரு முடிவு' என்று.

அவர் பதறியடித்துப் பதில் எழுதினார்:

"மகனே, நாம் யார்? அவள் யார்? இனம் தெரியாமல், குலம் தெரியாமல், பேசி முடித்து விட்டேன் என்கிறாயே? நாங்கள் இங்கு எதற்காக இருக்கிறோம்? பெற்றது ஒரு பிள்ளை. அதுவும், எங்கோ போய், எவளையோ கட்டிக் கொண்டது என்றால், அப்பனுக்கு இருதய நோய் வந்து விடாதா? உன் வாழ்க்கையில் எதிலும் நான் குறுக்கே நின்றதில்லை. இதிலும் நிற்கப் போவதில்லை. 'இதுதான் சுகம்; எதிர் காலத்துக்கு இதுதான்!' நலம் என்று நீ கருதினால், உன் இஷ்டப்படி மணம் முடித்துக் கொள்வதை நான் தடுக்கவில்லை. ஆனால், இந்தத் திருமணத்திற்கு என்னையும் அம்மாவையும் நீ எதிர்பார்க்க மாட்டாய் என்று நம்புகிறேன். எதிர்காலத்தில் நீ சீரும் சிறப்புமாய் வாழ்ந்தாலும் சரி நாங்கள் அதைக் கவனிக்கக் கூடிய நிலையில் இருக்க மாட்டோம். அதுவரையில் நாங்கள் உயிரோடு இருந்தால், உன் வயிற்றுக்குக் கஞ்சி ஊற்றுவது எங்கள் கடமை என்பதை மட்டும் மறக்க மாட்டோம்."

- இந்தக் கடிதம் என்னைச் சிந்திக்க வைக்கவில்லை.

இளம் பருவம் ஒரு காதலில் ஈடுபட்டு விட்டால், அது எதைப் பற்றியும் சிந்திக்காது.

சாக்கடையே கூடச் சமுத்திரம் என்றுதான் குதிக்கும்.

நான், எனக்கிருந்த மோக மயக்கத்தில், மோகனாவிடம் கடிதத்தைக் காட்டினேன்.

அவளோ, ''நானே உங்கள் பெற்றோரிடம் காலில் வந்து விழுந்து, என்னைச் சேர்த்துக் கொள்ளச் சொல்லுகிறேன்,'' என்றாள்.

''மாமாவையும் அத்தையையும் தெய்வங்களாகப் பூஜிப்பேன்!'' என்றாள்.

''அவர்களில்லாமலா நாம் வாழ்வது?'' என்றாள்.

முந்தானையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

நான் நம்பினேன், நம்பினேன், நம்பிக்கையின் உச்சத்துக்கே போய்விட்டேன்.

அநாதைகளுக்குத் திருமணம் நடத்துவதற்குத்தானே ஆண்டவனுக்குச் சந்நிதிகளைக் கட்டி வைத்திருக்கிறார்கள்!

இனம் தெரியாத தம்பதிகள், குலம் தெரியாத குழந்தைகள் - இவர்கள் வலம் வருவதற்குத்தானே கோவில் பிராகாரங்கள்!

'எங்கள் குடும்பத்தை உடைத்துப் போட்டுவிட்டு ஒன்று சேருகிறோம்!' என்பதற்கு அடையாளம்தானே, தேங்காய் உடைத்தல்!

'இந்த மாலையில் மணம் எவ்வளவு நேரம் நீடிக்குமோ, அவ்வளவு நேரம் எங்கள் அன்பும் நீடிக்கட்டும்!' என்பதற்குத் தானே மாலை மாற்றுதல் !

அதே கோவிலில், வேறு ஒருவனின் கையைப் பிடித்து விடக் கூடாது என்பதற்குத்தானே மாங்கல்யம்!

ஒரு கோயிலில் எங்கள் திருமணம் முடிந்து விட்டது.

கோயிலின் பெயரைச் சொல்லக் கூடாது. அது ஆண்டவனுக்கு அவமானம்.

சுவாமி! அந்த நேரம் எதை நான் நினைத்தேன்? பெற்றோர், உற்றார், பிறந்த ஊர் எதுவுமே என் நினைவில் இல்லை. திருமணத்தை முடித்துக் கொண்ட பிறகுதான் அவள் தாயையே நான் பார்த்தேன்.

'இதென்ன அதிசயம்!' என்கிறீர்களா?

அதுவரை அவளது தாயை அவள் எனக்குக் காட்டவில்லை.

'மங்கல காரியம் முடியும்வரை ஒரு அமங்கலியை நான் பார்க்க வேண்டாம்!' என்று சாஸ்திரம் கற்பித்தாள்.

கோவில் பிராகாரத்தை வலம் வந்து, ஒரு வாடகைக் காரில் நாங்கள் ஏறப் போகும்போது, முன் சீட்டில் என் மாமியார் அமர்ந்திருந்தாள்.

அமங்கலியா அவள்?

பட்டுடுத்திப் பொட்டு வைத்து, மாலை நேரத்து வாடிக்கைக்காரி போல் காட்சியளித்தாள்.

இப்போதுதான் அப்படிச் சொல்லுகிறேனே தவிர, அப்போது அந்தப் பட்டையும், பொட்டையும் பார்த்து, 'இவளல்லவோ கண்ணகி!' என்று கருதினேன்.

''ஏம்மா, உங்கள் அம்மாவை அமங்கலி என்றாய்?'' என்று மெதுவாக'மோகனாவிடம் கேட்டேன்.

''அவர்களை நீங்கள் சந்தித்திருந்தால், நம்முடைய கல்யாணத்தை அவர்கள் தடுத்தாலும் தடுத்திருப்பார்கள்," என்று மெதுவாகப் பொய் சொன்னாள்.

''முதலில் நாம் என் தாய் வீட்டுக்குச் சென்று, சாமி படத்திற்குப் பூஜை செய்துவிட்டுப் பிறகு உங்கள் அறைக்குப் போவோம்!" என்றாள்.

டாக்ஸி புரசைவாக்கத்தை நோக்கிப் பறந்தது.

மெயின் ரோடில் போன டாக்ஸி, குறுக்கே ஒரு சந்துக்குள் திரும்பிற்று.

கொஞ்ச தூரத்தில் கூட்டம் கூட்டமாகக் குடிசைகள்.

அங்கே போய் டாக்ஸி நின்றது.

'பாவம்! வசதியில்லாமல் குடிசையில் குடியிருக்கிறார்கள் போலிருக்கிறது!' என்று கருதினேன்.

சென்னைக் குடிசைவாசிகளின் பாஷை இருக்கிறதே, அதைத் தமிழ் எழுத்துக்களில் எழுதக் கூடாது. தனி லிபியே உற்பத்தி செய்ய வேண்டும்.

''என்னம்மா! பெரிய இடமா புச்சியா?'' என்று கேட்டான் ஒருவன்.

எல்லாவற்றையும் சகித்துக் கொண்டு, அலங்கோலமான ஒரு குடிசைக்குள் சென்று, சாமி படங்களுக்குப் பூஜை செய்தோம்.

அந்தப் படங்கள் மட்டும் மிக அழகாக வைக்கப்பட்டு இருந்தன.

திரும்பி, நாங்கள் வெளியே வரும்போதுதான் குடிசைக்காரர்களுக்கு விஷயம் தெரியும் போலிருக்கிறது.

அவர்கள் எல்லோரும் எங்களை ஆசீர்வதித்தார்கள்.

மோகனாவின் தாயார் அங்கேயே தங்கி விட்டாள்.

அரண்மனைக்காரன் தெரு அறையிலேயே அவளும் குடியேறினாள்.

அவளது உத்தியோகத் தோழிகள் சிலரும், குடிசைத் தோழிகள் சிலரும் வந்திருந்தார்கள்.

அவர்களுக்கெல்லாம் பலகாரம் வாங்கிக் கொடுத்து அனுப்பினோம்.

அன்றிரவு எங்கள் சாந்தி முகூர்த்தம்.

'பழகியவள் எப்படி யிருப்பாள், புதுப் பெண் எப்படி யிருப்பாள்?' என்பது எனக்குத் தெரியாது.

சாந்தி முகூர்த்தம் முடிந்தது.

எனக்கு அப்போதுதான் சாந்தி.

அவள் எப்போதோ சாந்திய டைந்து விட்டவள் என்பதைப் பின்னால்தான் உணர முடிந்தது.

## 3

மறுநாள் வீடு பார்த்தோம்.

திருவொற்றியூர் ஹைரோட்டில்தான் வீடு கிடைத்தது. எழுபத்து ஐந்து ரூபாய் வாடகை.

கையில் இருந்த பணத்தில் பண்டம், பாத்திரம் வாங்கினோம், புது மெத்தை வாங்கினோம்.

அதிகாலையில் எழுந்து அவள் சமையல் செய்வாள். ஒன்பதரை மணிக்குச் சாப்பிட்டுவிட்டு, இருவரும் அலுவலகம் போவோம்.

மதியம் ஓட்டலில் பலகாரம் சாப்பிடுவோம்.

மாலையில் பீச்சுக்குப் போய்த் திரும்பி வருவோம்.

நாங்கள் பீச்சுக்குப் போகும் போதெல்லாம், வழியில் யாராவது அவளை நிறுத்திப் பேசுவார்கள்.

எல்லோரையும் அவள் 'அண்ணா' என்றுதான் அழைப்பாள். நான் சந்தேகப் படவில்லை.

கிணற்றுக்குள்ளே வாளி விழுந்து விட்டால், பாதாளக் கரண்டியைப் போட்டுத் தேடி எடுத்து விடுகிறார்கள்.

கடலுக்குள்ளே விழுந்த பொருள்களைக்கூட, கடல் மூழ்கிகள் கண்டு பிடித்து விடுகிறார்கள்.

'சந்திர மண்டலத்தில் என்ன இருக்கிறது?' என்று பூமியில் இருந்தே தெரிந்து கொள்கிறார்கள்.

ஆனால், எந்த மண்டலத்திற்குள்ளும் புகும் விஞ்ஞானி, புகுந்து கண்டு பிடிக்க முடியாத மண்டலம் - பெண்ணின் இதயம்.

காலையிலும், மாலையிலும், காம சுகத்தில் ஈடுபட்டு, அந்த லாகிரிக்காகவே அவளை நம்பினேன்.

அந்தக் கண நேர இன்பத்தில், அவளைப் பற்றிய பின்னணியை - வரலாறுகளைக் கேட்க மறந்தேன்.

எப்பொழுது அழைத்தாலும், அப்படியே ஓடி வருவாள்.

சமையல் செய்கிற நேரத்தில்கூட, கொஞ்ச நேரம் படுக்கையில் படுத்து விட்டுப் போவாள்.

இரத்தத் திமிர் அதிகமாக உள்ள ஓர் இளைஞன், அப்படிப்பட்டவளிடம் வேறு எதைப்பற்றிக் கேட்பான்?.

குடிகாரனுக்கு, பாட்டிலைப் பார்த்தவுடனேயே சொர்க்க லோகம் தெரியும் என்றால், குடித்த பிறகு எத்தனை லோகம் தெரியாது!

அந்த லோகத்தில் உலாவும்போது, எந்த லோகத்தில் எவர் இருந்தால் என்ன?

ஆசை அறுபது நாளாம்; மோகம் முப்பது நாளாம்.

உண்மைதான்; எங்களுக்குத் திருமணம் ஆகிச் சரியாகத் தொண்ணூற்று ஓராவது நாள்.

எனக்கு வெறி தணிந்த நிலை. அவளுக்கோ வேறு நிலை.

நாங்கள் கடற்கரையிலிருந்து திரும்பியதும், அவள் குளித்தாள்; குழல் முடித்தாள்; பூச்சூடினாள்; பொட்டிட்டாள்; புதுச் சேலை அணிந்து கொண்டு புறப்பட்டாள்.

''அம்மாவைப் போய்ப் பார்த்து வருகிறேன்,'' என்று டாக்ஸி எடுத்தாள்.

அப்போதுதான் எனக்குச் சந்தேகம் தட்டிற்று.

அம்மாவைப் பார்ப்பதற்கு அலங்காரம் எதற்கு?

மணி ஒன்பது - பத்து - பதினொன்று.

கடிகாரத்தின் 'டிக் டிக்' ஓசை கேட்டதே தவிர, கதவு தட்டப்படும் ஓசை கேட்கப்படவில்லை.

எனக்குத் தூக்கம் வரவில்லை.

அவள் உண்மையிலேயே அம்மா வீட்டுக்குத்தான் போயிருக்கிறாளா?

ஒரு கணவனின் ஆதிக்க மனோபாவம் அப்போதுதான் எனக்குள் தலை தூக்கிற்று.

நானும் ஒரு டாக்ஸி எடுத்தேன்.

புரசைவாக்கம் குடிசைக்குப் போனேன்.

அந்தக் குடிசைகள்தான் எவ்வளவு கலகலப்பாக இருந்தன!

நாட்டில் எந்த அரசாங்கம் வந்தாலென்ன? பாட்டில் அங்கே விளையாடியே தீரும்.

ஏதேதோ விவஸ்தையற்ற கலாட்டாக்கள்.

பெண்களில் பலரே குடித்து விட்டு ஆடிக் கொண்டிருந்தார்கள்.

'சோமாறி' என்ற வார்த்தைக்கு என்ன அர்த்தம் என்றே எனக்குத் தெரியாது.

ஆனால், அந்த வார்த்தையைச் சொன்னால், எந்த ஆண்மகனுக்கும் கோபம் வரும்.

ஒரு பெண்ணைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு, எதுவும் செய்ய முடியாமல் தூங்குகிறவனுக்கு அந்தப் பெயராம்.

அந்த வார்த்தை அங்கே சர்வ சாதாரணமாக அடிபட்டது.

என்னைப் பார்த்ததும் ஒருவன், ''என்ன வாத்தியாரே, ஏத்திக்கினு போறியா?'' என்று கேட்டான்.

ஏத்துறதா? எதை? போதையையா? பெண்ணையா?

'காலணா அகலம் குங்குமப் பொட்டு' என்று 'பொன்னகர'த்தில் புதுமைப்பித்தன் வர்ணித்தாரே, அப்படிச் சில பெண்கள்.

ஆண்டவனே! தூத்துக்குடியிலும் தொழிலாளிப் பெண்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். ஒவ்வொரு தொழிலாளிப் பெண்ணும் ஒரு தெய்வ மகள்.

தவறக் கூடியவை ஒன்றிரண்டு இருக்கலாம். எந்த ஊரில் அவை இல்லை? ஒட்டு மொத்தமாகப் பார்த்தால் உத்தமப் பெண்களே அதிகம்.

சென்னை ஏன் இப்படிச் சீரழிந்து போய்விட்டது?

ஆராய்ச்சிக்கான நேரமா அது? இடமா அது?

எல்லோரையும் விலக்கிக் கொண்டு, மோகனாவின் குடிசைக்குச் சென்றேன்.

அந்தக் குடிசைக்குள்ளும் கறி வறுவல், சாராயம், கலாட்டா...

என் மாமியாரைச் சுற்றிச் சில பெண்கள், சில ஆடவர்கள்.

''வாங்க மாப்பிளே..." என்று அவள் இழுத்த பாணியே அலாதி.

மூக்கைப் பிடித்துக் கொண்டு, ''மோகனா எங்கே?'' என்றேன்.

''அவள் எட்டு மணிக்கே வந்து பார்த்துவிட்டுப் போய் விட்டாளே..'' என்றாள்.

நல்ல வேளை! அந்தக் கூட்டத்திலே என் மனைவி இல்லை.

ஆனால், பதினோரு மணிக்குத்தானே நான் வீட்டை விட்டுக் கிளம்பினேன்?

அதுவரை அவள் வீட்டுக்கு வரவில்லையே! பிறகு எங்கே போயிருப்பாள்?

நான் உயிரையும், மானத்தையும் கையில் பிடித்துக் கொண்டு, டாக்ஸியில் திரும்பினேன்.

நான் வீட்டுக்கு வந்து சேர்ந்தபோது, மோகனா வாசற்படியிலே உட்கார்ந்திருந்தாள்.

ஒன்றும் பேசாமல் கதவைத் திறந்தேன்.

உள்ளே போய் விளக்கைப் போட்டேன்.

மோகனாவை நன்றாகக் கவனித்தேன்.

நெற்றியில் அவள் இட்டுக் கொண்டு போனது ரோஸ் கலர் குங்குமம். இப்போது இருந்தது இரத்தச் சிவப்பு.

தலையிலே மல்லிகைப் பூவுக்குப் பதில் முல்லைப் பூ.

''என்ன, பூவும் குங்குமமும் மாறி இருக்கின்றன?'' என்றேன்.

அவள் பளிச்சென்று, ''அம்மா வைத்து விட்டார்கள்'' என்றாள்.

நான் நம்பி விட்டேன்.

ஒரு ஆடவன் எப்படி யெல்லாம் முட்டாளாகிறான் என்பதற்கு இது ஒரு உதாரணம்.

அவள் உடனே, ''சாப்பிட்டீர்களா? ஏதாவது பலகாரம் பண்ணவா?'' என்றாள்.

''ஒன்றும் வேண்டாம்,'' என்றேன்.

''இந்த நேரத்தில் எங்கே போனீர்கள்? இந்த வேலை எல்லாம் செய்யாதீர்கள்!'' என்று என்னைக் கண்டித்தாள்.

நான் மேலும் நம்பி விட்டேன்.

''சரி சரி! சாயங்காலம் வாங்கிய முறுக்கு இருந்தால் கொண்டு வா,'' என்றேன்.

''நானே அம்மா வீட்டில் இருந்து கொண்டு வந்திருக்கின்றேன்,'' என்றாள்.

''ஐயையோ! வேண்டாம்! அதை எண்ணெயில் பொரித்தாளோ, சாராயத்தில் பொரித்தாளோ?'' என்றேன்.

''இதோ பாருங்கள், அப்படி எல்லாம் பேசாதீர்கள். என் அம்மா அப்படி எல்லாம் இல்லை!'' என்றாள்.

''நான்தான் பார்த்து விட்டு வந்தேனே!'' என்றேன்.

வார்த்தை முற்றியது.

அவள் ஒரு மூலையில் படுத்து அழுதாள்.

நானும் ஒரு மூலையில் படுத்து, என் பெற்றோரை எண்ணி அழுதேன்.

'குடும்பம் பார்க்காமல் பெண் எடுப்பது எவ்வளவு பெரிய தவறு!' என்ற எண்ணம் என்னை உறுத்திற்று.

பொழுது விடியும் நேரம்.

சென்னையில் சேவல் சத்தம் எங்கே கேட்கிறது? லாரிகளின் ஹாரன் சத்தம் எங்கோ கேட்டது.

நான் எழுந்தேன்.

அதற்குள்ளாகவே அவள் எழுந்து, தலை முழுகிக் குளித்திருந்தாள்.

'இரவிலே உறவிருந்தால்தான், பெண் காலையிலே தலை முழுகிக் குளிப்பாள்!' என்று எங்கள் ஊரிலே சொல்லுவார்கள்.

''ஏம்மா தலை குளித்தாய்?'' என்று கேட்டேன்.

''இரவிலே டாக்ஸியிலே போய் வந்ததினால், தலை எல்லாம் ஒரே அழுக்கு!'' என்றாள்.

சுவாமி! இமயமலை மீதேறி இறைவனைக் காண நாம் முயற்சிக்கிறோமே, இத்தகைய பெண்களின் மனதைக் காண ஏதாவது முயற்சிக்கிறோமா?

மறுநாள் அவள் கலகலப்பாக இருந்தாள்.

பிரமாதமாகச் சமையல் செய்தாள்.

சமையல் செய்து கொண்டே, ''இங்கிருந்து லிங்கிச் செட்டித் தெரு வெகு தூரத்தில் இருக்கிறது. தம்புச் செட்டித் தெருவில் ஒரு வீடு இருக்கிறது. இதே வாடகைதான். மாற்றிக் கொள்ளலாமா?'' என்றாள்.

எனக்கும் அது சரியாகவே தோன்றிற்று.

## 4

வீட்டுக்கு அச்சாரம் கொடுத்தோம்.

இரண்டு நாட்களிலேயே வீட்டையும் மாற்றினோம்.

வீடு மாற்றி, சாமான்கள் போய் இறங்கும்போது, பக்கத்து வீட்டு இளைஞன் ஒருவன் எங்களோடு மிகவும் ஒத்துழைத்தான்.

அவனே சாமான்களை இறக்கி வைத்தான்.

அவளும் அவனைத் தெரியாதவள் போலவே நடந்து கொண்டாள்.

அவன் பக்கத்தில் கொண்டு வந்து, எதையாவது வைக்க வந்தால், ''கொஞ்சம் தள்ளி நில்லுங்கள்,'' என்றாள்.

'ஆகா! என் மனைவி எவ்வளவு பத்தினி!' என்று அப்போதும் நான் நம்பி விட்டேன்.

அந்த வீட்டின் ஒவ்வொரு பகுதியாக நான் பார்த்தேன்.

ஏற்கனவே சில நல்ல சோபாக்களும் விளக்குகளும் போடப் பட்டிருந்தன.

''இதெல்லாம், யார், வீட்டுக்காரர் போட்டதா?'' என்று அவளைக் கேட்டேன்.

''இல்லை, எங்க அம்மா சேமித்து வைத்திருந்த பணத்தில், நேற்றுத்தான் கொண்டு வந்து மாட்டினார்கள்!'' என்றாள்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை.

'எங்கேயோ ஒரு நடுக் காட்டுக்குள் வந்து சிக்கிக் கொண்டு விட்டோமோ' என்று மட்டும் தோன்றிற்று.

பாத் ரூமிற்குள் போய் நின்று கொண்டு, 'கடவுளே! கடவுளே!' என்று சுவரைக் கையால் குத்தி அழுதேன்.

அழுது விட்டு வெளியே வரும்போது, அவள் அந்த இளைஞனுக்குக் காபி கொடுத்துக் கொண்டிருப்பதைக் கண்டேன்.

சுவாமி! 'இடுக்கண் வருங்கால் நகுக' என்றானே, வள்ளுவன். நான் எவ்வளவு நேரம் நகுவது?

நான் இருவரையும் பார்த்து ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்தேன்.

அதைப் பார்த்து, முகத்தைக் தோள்பட்டையில் இடித்துக் கொண்டு, அவள் உள்ளே சென்று விட்டாள்.

அந்த இளைஞனோ, ''எக்ஸ்க்யூஸ் மி ப்ரதர்! உங்களுக்கு எந்த நேரமும் எந்த உதவியும் செய்யக் கடமைப் பட்டிருக்கிறேன்!'' என்று சொல்லி விட்டு எழுந்து சென்றான்.

காமத்தில் கட்டுண்டவனுக்கு இருக்கின்ற இக்கட்டு இதுதான். 'விடவும் முடியாது. தொடவும் முடியாது' என்ற நிலை.

அந்த வயதில் எனக்கிருந்த மயக்கம் ஒரு சிட்டுக் குருவியைப் போலவே நடந்து கொள்ளத் தூண்டிற்று.

நான் படுக்கைக்கு அழைக்கும் போதெல்லாம் அவள் மறுக்காமல் வந்து கொண்டிருந்தாள்.

இக்கட்டான நேரம் வரும் போதெல்லாம், அவளை இழுத்து உறவு கொண்டு கடைசியில் சமாதானமாகப் போய் விடுவேன்.

எனது பலவீனத்தை அவள் நன்றாக அறிந்து வைத்திருந்தாள்.

சிவனது பலவீனத்தில்தானே சக்திக்கே அந்தப் பெயர் வந்ததாம்.

இருவரும் அலுவலகத்துக்குப் போவோம். சமயங்களில் அவள் உடல் நலமில்லை என்று லீவு போட்டு விடுவாள்.

அலுவலகத்தில் எனக்கு இருப்புக் கொள்ளாது.

லீவு போட்டு விட்டு என்ன செய்கிறாள் என்று பார்க்க, திடீரென்று வீட்டுக்கு வருவேன்.

அப்போது அவள் தனியாகத்தான் இருப்பாள்.

அலுவலகத்தில் அவளுக்கு ஒரு தோழி உண்டு. நான் புறப்பட்டவுடன், அவள் டெலிபோன் செய்து விடுவாள் போலிருக்கிறது.

பக்கத்து வீட்டுப் பையனோடு அவள் உறவு வைத்துக் கொண்டதையும், நான் நேருக்கு நேராகப் பார்த்ததில்லை. ஆனால், உறவு இருந்தது என்பதில் சந்தேகமில்லை.

அவர்கள் சிரிப்பதும், கையை ஆட்டிக் கொள்வதும், என் முன்னிலையிலேயே ஜாடை பேசிக் கொள்வதும், சகிக்க முடியாததாக இருந்தன.

பாண்டிய நாட்டுக் கிராமங்களில், 'மழுங்கல்' என்றொரு வார்த்தை சொல்வார்கள்.

மனைவியின் நடத்தை தெரிந்தும், தெரியாதவன் போல் நடந்து கொள்கிறவனுக்கு, அந்தப் பெயர் உண்டு.

நான் அப்படித்தான் ஆகி விட்டேன்.

ஒரு நாள் திடீரென்று அலுவலகத்துக்குப் போவது போல் போய்விட்டு, அரைமணி நேரத்தில் திரும்பி வந்தேன்.

அப்போதும் அவள் தனியாகவே இருந்தாள்.

என்னால் எதையும் கண்டு பிடிக்க முடியவில்லை.

கண்ணுக்குக் கண்ணாகக் கண்டு பிடித்து விட்டால், பிறகு நான்தான் என்ன செய்யப் போகிறேன்?

அவளை விலக்கி விடப் போகிறேனா? ஓடிவிடப் போகிறேனா?

அதே நினைவில் சாகப் போகிறேன்.

அதை விட அந்த முயற்சியில் ஈடுபடாமல் இருப்பதே நல்லது என்ற முடிவுக்கு வந்தேன்.

இந்த நிலையில் அவள் கர்ப்பவதி ஆனாள்.

அவளுக்கே அந்த வாழ்க்கையில் ஒரு அலுப்புத் தோன்றி இருக்க வேண்டும்.

அந்த இளைஞனோடு அனுபவித்தது போதும் என்று அவள் எண்ணி இருக்க வேண்டும்.

பிறகு அவள் அலுவலகத்துக்கு ஒழுங்காக வரத் தொடங்கினாள்.

சுவாமி! ஒவ்வொரு நாளும் இருபத்துநாலு மணி நேரமும் நான் எப்படி இருந்திருப்பேன் என்பதை உங்களால் கற்பனை செய்ய முடிகிறதா?

நீங்கள் கேட்பீர்கள், 'உடனடியாகச் சனியனைத் தொலைத்துத் தலை முழுகி இருக்க வேண்டியதுதானே!' என்று.

எனது மோகவெறி அதற்கும் என்னை விடவில்லை.

ஒவ்வொரு சமயங்களில் அவளிடமே, 'நான் உன்னைத் தவறாகச் சந்தேகப்பட்டு விட்டேன்!' என்று சொல்லி விடுவேன்.

அவளும், 'நான் உங்கள் முகம் பார்த்தது தவிர, வேறு முகம் பார்த்தது கிடையாது!' என்று தலையிலடிப்பாள்.

அந்தப் பொழுது மிக இனிமையாக இருக்கும்.

பிறகு வேதாளம் மறுபடியும் முருங்கை மரம் ஏறி விடும்.

'உங்கள் சந்தேகம் உங்களை விட்டுப் போகாது!' என்பாள், அவள்.

'மற்றும் ஒரு கொடுமை நடந்து கொண்டிருக்கிறது!' என்பதை, அப்போதும் நான் கண்டு பிடிக்கவில்லை.

அலுவல்கத்தில் உட்கார்ந்தபடி யாருக்கோ அவள் டெலிபோன் செய்வாள்.

யாராவது தோழிக்கு டெலிபோன் செய்வாள் என்று நான் விட்டு விட்டேன்.

ஒரு தடவை அவள், 'டைம் நான் சொல்லுகிறேன்!' என்று சொன்னது என் காதுக்குக் கேட்டது. அப்போதுதான் என் புதிய சந்தேகம் பூத்துக் குலுங்கத் தொடங்கிற்று.

அவள் டெலிபோனை வைத்ததும், ''யாருக்கு டெலிபோன்?'' என்று கேட்டேன்.

''கமலா பேசினாள்'' என்றாள்.

பிறகு நான் என்ன பேச முடியும்?

கோடை காலம் வந்தது.

''பதினைந்து நாள் லீவு போட்டுவிட்டுப் பெங்களூருக்குப் போகலாம்,'' என்றாள்.

''பணம்...?'' என்றேன்.

''நான் ஐயாயிரம் ரூபாய் சேர்த்து வைத்திருக்கிறேன்,'' என்றாள்.

''எப்படி...?'' என்றேன்.

''என் அம்மா கொடுத்தது,'' என்றாள்.

எனக்குச் சிரிப்பு வந்தது.

ஒருவேளை, அம்மா தொழிற்பண்ணிச் சம்பாதித் திருக்கலாம் என்று எண்ணினேன்.

ஆனால், உண்மை அதுவல்ல, சுவாமி!

அது பக்கத்து வீட்டுப் பையன் கொடுத்தது.

## 5

இருவரும் பெங்களூருக்குப் போனோம்.

ஒரு சிறிய ஹோட்டலில் தங்கினோம்.

பக்கத்து அறையில் யாரோ ஒருவர், சுமார் ஐம்பது வயதிருக்கும். அவரோடு அவள் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தாள்.

''யாரது...?'' என்று கேட்டேன்.

''இவர்தான் என் அப்பா. அவருக்கும் அம்மாவுக்கும் வெகுகாலம் பேச்சு வார்த்தை இல்லை'' என்றாள்.

எனக்கு வந்த கோபத்தில், ''உனக்குத்தான் எத்தனை அப்பா...?'' என்று கேட்டு விட்டேன்.

''உங்களுக்கெல்லாம் எத்தனை அப்பா?'' என்று அவள் திருப்பிக் கேட்டாள்.

எனக்குச் சிரிப்பு வரவில்லை. அழுகை வந்தது.

'குணங் கெட்டவளோடு வாழலாம், குலங்கெட்டவளோடு வாழக் கூடாது!' என்பார்கள்.

'குலவித்தை கல்லாமல் பாகம் பெறும்' என்பார்கள்.

'சாராயக் குடிசையில் இருந்து பிடித்த ஒன்று' எப்படித் தரம் உள்ளதாக இருக்க முடியும்?

மனிதன் நிம்மதியைத் தேடி எங்கெங்கோ போகிறான். துன்பம் நெஞ்சுக்குள்ளேயே இருந்தால், எந்த ஊரிலே அவனுக்கு நிம்மதி கிடைக்கும்? அவன் எங்கே போனாலும், அதையும் சுமந்து கொண்டுதானே போகிறான்?

பெங்களூருக்குப் போயும் எனக்கு நிம்மதி கிடைக்கவில்லை.

பிறகென்ன? பழையபடியும் பலவந்தமான உடலுறவு.

மிருகங்களுக்கும் எனக்கும் இருந்த ஒரே வித்தியாசம், அவை ஒரு அறைக்குள்ளே இருப்பதில்லை; நான் இருந்தேன். அவ்வளவுதான்

அற்புதமான அந்த இளமைக் காலம், சேற்றிலே சிக்கிக் கொண்டு விட்டது.

'சாக்கடையில் பிடித்த மீன் சமையலுக்கு உதவாது!' என்பார்கள்.

அவள் மட்டுமா அப்படி இருந்தாள்? நானும் அப்படியாகி விட்டேன்.

சாக்கடைக்குப் போக்கிடம் ஏது? அது என்ன கங்கையிலா கலக்க முடியும்?

அவளை நிர்வாணப் படுத்துவது, இடுப்பிலே உதைப்பது, கேவலமாகப் பேசுவது - இப்படியெல்லாம் ஆரம்பித்தேன்.

அவள் அதையே சாக்காக வைத்துக் கொண்டு, அப்பா அறையில் போய் உட்கார ஆரம்பித்தாள்.

அப்பாவும் மகளை உச்சி முகர்ந்து வரவேற்பார்.

நான் ஒரு முடிவுக்கு வந்தேன்.

அவளைக் கொண்டு போய்ச் சென்னையில் விட்டு விட்டு, நாம் தூத்துக்குடிக்குப் போய் விடலாம் என்று முடிவு கட்டினேன்.

உடனே மறு எண்ணம் குறுக்கிட்டது.

'நாம் அவளைத் தனியாக விட்டு விட்டால், அவள் அந்தப் பையனோடு தனியாகச் சுற்ற ஆரம்பிப்பாளே! விடக்கூடாது.' என்று தோன்றிற்று.

நானா அவளைக் காப்பாற்ற முடியும்?

இடுப்புக்கென்ன கற்புக் கவசமா போட முடியும்?

'முட்டாளுக்கு மூன்று இடத்திலே' என்பார்கள்.

காலிலே மலம் பட்டால் அதைக் கழுவி விட்டுப் போகாமல், கையால் தொட்டு, மூக்கிலும் வைத்துக் கொள்வானாம். அது ஒரு இடத்தில் பட்டதோடல்லாமல், மூன்று இடத்திலும் படுமாம்.

என் கதையும் அதுதான்.

ஒரு நாள் இரவு.

நாங்கள் தங்கியிருந்த ஹோட்டலில், எல்லா அறைகளிலேயும் மதுப் புட்டிகள் விளையாடும்.

'கவலைகளை மறக்கத்தான் மனிதன் குடிக்கிறானாமே! நாமும் குடிக்கலாமா?' என்று யோசித்தேன்.

பாண்டிய நாட்டுக் கிராமங்களில் பலவீனமாக உள்ள ஒருவன், இன்னொருவனை உதைக்க வேண்டுமென்று விரும்பினால், 'இருடா, கொஞ்சம் போட்டுட்டு வந்து ஒதைக்கிறேன்!' என்று சொல்வதுவழக்கம்.

போதைக்கு அந்த சக்தி உண்டு போல் எனக்குத் தோன்றிற்று.

திடீரென்று கீழேயிருந்த 'பா' ருக்குப் போனேன். மெதுவாக 'பார்' மானேஜரிடம், எதைக் குடித்தால் கசக்காது?' என்று கேட்டேன்.

'ஜின்னில் லெமன் பார்லி போட்டுக் குடியுங்கள்,' என்றார் அவர்.

அரை பாட்டில் ஜின்னும், மூன்று பாட்டில் லெமன் பார்லியும் வாங்கினேன்.

ஜின் வெள்ளை வெளேரென்றிருந்தது.

அதை லெமன் பார்லியில் கலந்து விட்டால் வித்தியாசம் தெரியாது.

எனக்கு ஒரு யோசனை தோன்றிற்று.

அவளோடு கொஞ்சிப் பேசி, கலந்து கொடுத்து விட்டால், உண்மைகளை எல்லாம் கக்கி விடுவாளே!

மறுபடியும் பாண்டிய நாட்டுக் கிராமத்திற்கு வருகிறேன்.

அங்கே சொல்வார்கள், 'சாராயத்தை உள்ளே போட்டால், பூராயம் எல்லாம் வெளியிலே வரும்!' என்று.

'பூராயம்' என்ற சொல், பூர்வீகத்தைக் குறிப்பது.

மெதுவாக ஜின் பாட்டிலில் இருந்த லேபிளைக் கிழித்தேன்.

அவள் அருகில் சென்றேன்.

''சரி, வாம்மா. போனது போகட்டும். இன்றைக்கு ஜாலியாக இருப்போம்.'' என்று அவளை அழைத்தேன்.

என் கையை உதறி விட்டாள்.

பிறகு அவளை மெதுவாகச் சமாதானப் படுத்தினேன்.

எழுந்து வந்து, ''இதென்ன கசக்குமா?'' என்று கேட்டாள்.

''சேச்சே! அதற்காகத்தான் லெமன் பார்லி!'' என்று சொல்லிக் கலந்து கொடுத்தேன்.

வேடிக்கையைப் பாருங்கள், நான் கண்ணை மூடிக் கொண்டு குடிக்கிறேன் ; அவள் சுவைத்துக் குடிக்கிறாள்.

குடிசைப் பழக்கம் கூடவே வருகிறது.

குடித்து விட்டு, ''தொட்டுக்க ஏதாவது வேணுமே..." என்று கேட்டாள்.

''என்னைத் தொட்டுக்க!'' என்றேன்.

உடனே அவள் என்னைக் கட்டி முத்தமிட்டு, ''கொஞ்சம் ஊறுகாயும், சொமுசாவும், கறி வறுவலும் கொண்டு வரச் சொல்லுங்கள்,'' என்றாள்.

அவள் பேச்சில் குடிசை வாசனை குப்பென்று வீசிற்று.

நான் மறுக்காமல் நிறையக் கொண்டு வரச் சொன்னேன்.

அவளுக்கு நிறைய ஊற்றிக் கொடுத்து உளற வைக்க வேண்டும் என்று முடிவு கட்டினேன்.

குடித்தாள் ; தின்றாள் ; முடித்தாள்.

நான் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

நான் பேசாமலேயே, அவள் பக்கத்து வீட்டுப் பையனைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள்.

''அவர் ரொம்ப நல்லவர். நீங்க நெனைக்கிற மாதிரி தப்பு ஒண்ணுமில்லே. இன்னும் என்னைத் தொட்டதுகூட இல்லே. முன்னே எல்லாம் எனக்கும் அம்மாவுக்கும் கடன் வேண்டுமென்றாலும் கொடுப்பார். இப்போ அதுகூட நான் வாங்குறதில்லே. உங்களை விடவா அவர் எனக்குப் பெரிசு?'' என்றாள்.

நான் உளறுவாள் என்று எதிர்பார்த்தால், அவள் என்னைப் புகழத் தொடங்கினாள்.

'குடி, ஒன்று அந்த எல்லைக்குப் போகும். இல்லை என்றால், இந்த எல்லைக்குப் போகும்!' என்று எனக்கு அப்போது தெரியாது.

நான் மோகத்தில் சிக்கினேன். இந்த நேரத்தை வீணாக்க வேண்டாம் என்று தோன்றிற்று. அவள் உளறாமல் இருப்பதே நல்லது என்றும் தோன்றிற்று.

''உன்னை நான் சந்தேகப் படவே மாட்டேன்டா, கண்ணா!'' என்று கொஞ்சத் தொடங்கினேன்.

சுவாமி! நான் உளறத் தொடங்கினேன்.

அவள் என் கால்களில் முத்தமிட்டாள், ஆய கலைகள் அறுபத்து நாலிலும் இறங்கினாள்.

பொழுது விடிந்தபோதுதான், 'நாம் தினமும் மடையனாகிறோம்' என்பது எனக்குப் புரிந்தது.

மேஜையைப் பார்த்தேன். அங்கே இரண்டு அரை பாட்டில்கள் இருந்தன.

நான் தூங்கிய பிறகு அவள் மேலும் அரை பாட்டில் வாங்கிச் சாப்பிட்டிருக்கிறாள்.

நான் அப்படியே படுக்கையில் சாய்ந்தேன்.

''அம்மா, மோகனா...'' என்று குரல் கேட்டது.

''கம் இன்,'' என்று குரல் கொடுத்தேன்.

தள்ளாடியபடி உள்ளே நுழைந்தார் 'திடீர்' அப்பா.

''ராத்திரி என் பொண்ணு நல்லா சாப்பிட்டாளா?'' என்று கேட்டார்.

''நல்லா சாப்பிட்டுத் தூங்கறா!'' என்றேன்.

''நான் எம் பொண்ணை கிளி மாதிரி வளர்த்தேன்!'' என்று சொல்லி விட்டு அழ ஆரம்பித்தார்.

குடித்தால் அழவும் தோன்றும் என்று எனக்கு அப்போது தான் தோன்றிற்று.

மோகனா அலங்கோலமாகத் தூங்கிக் கொண்டிருந்தாள்.

''எங் கண்ணு ! ராசாத்தி ! தூங்கம்மா!'' என்றார் அவர்.

தூங்குகிறவளைப் பார்த்து, 'தூங்குகிறாயா?' என்று கேட்பதும், சாப்பிடுகிறவனைப் பார்த்து, 'சாப்பிடுகிறாயா?' என்று கேட்பதும், நம் நாட்டிலுள்ள நல்ல பழக்கங்கள்.

அவர் என் கட்டிலிலேயே உட்கார்ந்து கொண்டு,

''மாப்பிளே, இவங்க அம்மாவைப் பார்த்திட்டீங்களா?'' என்று கேட்டார்.

நான் விழித்தேன்.

''விடாதீங்க,? நல்ல கட்டை!'' என்றார் அவர்.

அட, கடவுளே! இவர்தானா அப்பா?

''கொஞ்சம் சாப்பிடுறீங்களா...?'' என்று என்னை வேறு கேட்டார்.

''காலையில் நான் காபிதான்,'' என்றேன்.

''காபியை மனுஷன் குடிப்பானா...?'' என்றார்.

அவரை எப்படி வெளியில் அனுப்புவதென்றே எனக்குப் புரியவில்லை.

ஜிப்பா பையிலேயே பாட்டிலைச் செருகிக் கொண்டு வந்திருந்தார்.

''மாப்பிளே, பொண்ணு எந்திரிச்ச உடனே சொல்லுங்க" என்று சொல்லி விட்டுப் போய்விட்டார்.

சுவாமி! நான் பிறந்ததென்ன, வளர்ந்ததென்ன, வாழ்ந்ததென்ன, சிக்கிக் கொண்ட சேறுதான் என்ன!

மோகனாவின் சரித்திரத்தில் இன்னும் என்னென்ன இருக்குமோ என்று நான் அஞ்சத் தொடங்கினேன்.

உள்ளம் சூடேறி விட்டது. உடம்பாவது குளிரட்டுமே!

பச்சைத் தண்ணீரில் பதினைந்து நிமிஷம் குளித்தேன்.

அவளோ, குடிசைவாசிகள் வந்து, எழுப்பினாலொழிய எழ மாட்டாள் போலிருந்தது.

சுவாமி! இப்படி நான் சொல்லும்போது, எல்லாக் குடிசைவாசிகளையும் நான் மோசமாகக் கருதி விட்டேன் என்று எண்ணக் கூடாது. அவளுடைய குடிசையில் வசிப்போர்களை மட்டுமே சொல்கிறேன்.

சென்னை நகரத்துக் குடிசைகளில் எவ்வளவோ உத்தமர்கள், நல்லவர்கள் இருக்கிறார்கள்.

கட்சித் தலைவனுக்காக உயிரை விடும் தொண்டர்கள் இருக்கிறார்கள்.

ஆபத்தான நேரங்களில் உதவிக்கு வரும் ஆபத்பாந்தவர்கள் இருக்கிறார்கள்.

கைப் பணத்தைப் போட்டு, சிறு அம்மன் கோவில் கட்டி, காலம் தவறாமல் பூஜை செய்வோர் இருக்கிறார்கள்.

நான் வருணிப்பது, மோகனாவின் தாய் வாழும் குடிசையை மட்டுமே.

எனக்குப் பசித்தது. இட்லி, தோசை வரவழைத்துச் சாப்பிட்டேன். அவளை நான் எழுப்பவே இல்லை.

காலை மணி ஒன்பது.

அவள் திரும்பிப் படுத்தாள். அப்போதுதான் தன்னை அறியாமல், 'மோகன்லால்' என்றாள்.

போதாதா எனக்கு?

பக்கத்து வீட்டுப் பையன் பெயர் மோகன்லால் !

பெயர்தான் வட நாட்டுப் பெயரே தவிர, அவனும் திருச்செந்தூரைச் சேர்ந்தவன்தான்.

'அடி மேல் அடி, இடி மேல் இடி' என்பார்கள்.

இனிமேல் நான், 'குடிமேல் குடி' என்று தொடர்ந்தாலொழிய, அவளை மறக்க முடியாது.

நான் தயாராக இல்லை.

நல்ல வேளையாக எங்கள் கல்யாணம் பதிவு செய்யப் படவில்லை. கோவிலிலும் புகைப்படம் எடுக்கப்படவில்லை.

அவளைச் சென்னையில் விட்டுவிட்டு, ஊருக்குச் சென்று, பெற்றோர் மூலம் வேறு கல்யாணம் செய்து கொள்வது என்று முடிவு கட்டினேன்.

அந்த முடிவிலேயே எனக்கு ஒரு தெம்பு பிறந்தது.

மெதுவாக அவளைத் தட்டி எழுப்பினேன்.

'இனி இவள் நம் மனைவியல்ல!' என்ற முடிவுடனேயே எழுப்பினேன்.

அவள் கண்ணைத் துடைத்தபடி "மணி என்ன?" என்றாள்.

"பத்து," என்றேன்.

"ஐயய்யோ! இட்லி கொண்டு வரச் சொல்லுங்கள். பிறகு தீர்ந்து விடும்," என்றாள்.

"எல்லாம் மேஜையிலேயே இருக்கிறது." என்றேன்.

போய் முகத்தைக் கழுவி விட்டு, பல்லைக்கூட விளக்காமல், நாலு இட்லிகளைப் புட்டுப் போட்டாள்.

பிறகு என்னைப் பார்த்து, "இதோ பாருங்க, இனிமே இந்தக் குடிக்கிற வேலை வேண்டாம்," என்றாள்.

"மெத்தச் சரி," என்று நான் சிரித்தேன்.

அவள் மீண்டும் படுக்கப் போனாள்.

"ஒங்க அப்பா வரச் சொன்னாரு," என்றேன்.

"அப்பா தப்பானவர். நான் போக மாட்டேன்," என்றாள்.

மீண்டும் அவள் படுத்து விட்டாள்.

வாழ்க்கையில் இப்படியொரு வகை.

முறையாகக் காலையில் எழுந்து, குளித்துச் சாப்பிடுவது என்றில்லாமல், எவ்வெப்பொழுது எப்படித் தோன்றுகிறதோ, அப்படி வாழ்வது, எந்த வேளையிலும் சாப்பிடுவது, எந்த வேளையிலும் தூங்குவது.

ஆண்களுக்கு மட்டுமின்றி, சில பெண்களுக்கும் இந்தப் பழக்கம் உண்டு என்பதை அன்று அவளிடமிருந்து தெரிந்து கொண்டேன்.

மதியம்வரை தூங்கினாள்.

மறுபடியும் எழுந்து, கொஞ்சம் விஸ்கி கேட்டாள்.

அந்தப் பழக்கம் உண்டாகி விட்டால், தொடரும் என்பது எனக்குத் தெரியும். ஆனால், இவளுக்கு அது புதுப் பழக்கம் அல்ல. குடிசையிலேயே இந்த நல்ல பழக்கம் இருந்திருக்கிறது.

நான் தயக்க மில்லாமல் வாங்கிக் கொடுத்தேன்.

பிறர் குடித்து விட்டு ஆடுவதைப் பார்ப்பது, ஒரு சுகம் அல்லவா!

பிறகென்ன? மீண்டும் அதே ரசனை, அதே புகழ்ச்சி.

சுமார் நான்கு மணிக்கு அவள் தூங்கத் தொடங்கினாள்.

ஒரு பக்கா விலை மகளைக் குல மகளாக்கி விட்ட கொடுமையை நான் உணர்ந்தேன்.

ஏதேனும் ஒரு விலைமகளைச் சந்திக்க வேண்டும் போல் எனக்குத் தோன்றிற்று.

நகரங்களில் உள்ள விலை மாதர்கள் இவளை விடவா மோசமாக இருப்பார்கள்?

பழங்காலங்களில் தேவதாசி முறை இருந்தது. அதில் ஒரு பண்பாடு இருந்தது. பரம்பரையாக அந்தத் தொழில் செய்த காரணத்தினாலே, ஒரு நாள் தங்குகிறவனையும் தாலி கட்டிய கணவனாகவே அவர்கள் நடத்துவார்கள். நோய்க்கு மருந்தில்லாத காலத்திலேயே அவர்களால் நோய் வருவது குறைவு. துரதிருஷ்டவசமாக அந்த முறை ஒழிக்கப்பட்டு விட்டது.

தேவர்களாலும், ரிஷிகளாலும், முனிவர்களாலும், அரசர்களாலும் ஒப்புக் கொள்ளப்பட்ட முறை, தேவதாசி முறை.

நாட்டுக்குச் சுதந்திரம் வந்து, களை எடுக்கும் வேகத்தில்,கனி மரங்களையும் வெட்டி விட்டார்கள்.

அதன் விளைவாகத் தவறான விபசாரிகள் பெருத்துப் போனார்கள்.

குடும்பப் பெண் கெட்டுப் போவதும், கெட்டுப் போனவள் குடும்பத்துக்குள் நுழைவதும் சர்வ சாதாரணமாகி விட்டன.

நாமும் ஒரு விலைமகளைச் சந்திக்கலாம் என்று முடிவு கட்டினேன்.

ஒரு விலை மகளோடுதான் நான் வாழ்ந்து கொண்டிருந்தேன் என்றாலும், அன்றைக்குப் பணம் வாங்கிக் கொண்டு வருகிறவள் எப்படி இருப்பாள் என்று பார்க்க விரும்பினேன்.

அவளை அப்படியே தூங்கப் போட்டுவிட்டு, ஆறு மணி சுமாருக்கு வேறொரு ஹோட்டலுக்குப் போனேன்.

அவள் கொடுத்த பணம்தான் கையில் இருக்கிறதே.

அந்த ஹோட்டலுக்குப் பெயர் 'மை ஹோட்டல்.'

பெரும்பாலும் அந்த ஹோட்டலில் எல்லா அறைகளிலும் பெண்களை வைத்திருப்பார்கள்.

அறைக்குள் நுழைந்து பார்க்க வேண்டியது. எது பிடிக்கிறதோ, அதை அந்த அறையிலேயே வைத்துக் கொள்ள வேண்டியது.

ஓர் அறையில் ஒரு பெண்ணை நான் தேர்ந்தெடுத்தேன்.

அவள் பெயர், மல்லிகா.

அறைக்கும் அவளுக்குமாகச் சேர்த்து இருநூறு ரூபாய் பணத்தைத் தரகனிடம் கொடுத்து விட்டு, அறைக் கதவைச் சாத்திக் கொண்டேன்.

அவள் எழுந்து நின்றாள். என்னை உட்காரச் சொன்னாள். ''ஏதாவது சாப்பிடுகிறீர்களா?'' என்றாள்.

''ஒன்றும் வேண்டாம்,'' என்றேன்.

கதவு தட்டும் சத்தம் கேட்டது.

கதவைத் திறந்தாள். ஹோட்டல் பையன் ஒரு தட்டிலே அரை பாட்டில் விஸ்கி, இரண்டு பீர் பாட்டில்கள், இரண்டு சோடா பாட்டில்கள், இரண்டு கண்ணாடி டம்ளர்கள் ஆகியவற்றைக் கொண்டு வந்து மேஜை மீது வைத்தான்.

அது அந்த இடத்து வாடிக்கை போலிருக்கிறது.

ஆர்டர் கொடுக்காமலேயே, அவையெல்லாம் தானே வந்து விட்டன.

முப்பத்தோரு ரூபாய்க்கு ஒரு பில்லை என்னிடம் நீட்டினான். கொடுத்தேன்.

அவளைப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு, கதை கேட்க ஆரம்பித்தேன்.

''உனக்கு அப்பா அம்மா இருக்கிறார்களா? நீ ஏன் இந்தத் தொழிலுக்கு வந்தாய்?'' என்றெல்லாம் விசாரித்தேன்.

அவள் எழுந்து போய்க் கொஞ்சம் விஸ்கியை ஊற்றிக் கொண்டு வந்து என்னிடம் கொடுத்தாள்.

பிறகு தன் கதையைச் சொல்லத் தொடங்கினாள்.

இராமநாதபுரம் ஜில்லாவில், இராமேஸ்வரம் போகிற வழியில், ஒரு கிராமமாம், அவள் ஊர்.

அக்காள் தங்கைகள் ஏழு பேராம். சகோதரர்கள் கிடையாதாம்.

அப்பாவுக்கு மூன்று ஏக்கர் நிலம் இருந்ததாம். மழை பெய்தால்தான் விளைச்சலாம்.

அப்பொதெல்லாம் மோட்டார் பம்ப் செட் ஏது?

ஒருத்திக்கும் திருமணம் ஆகவில்லையாம்.

விபசாரத்திற்குப் பெண் தேடும் தரகர்கள் அங்கே கிராமம் கிராமமாகச் சுற்றுவார்களாம்.

பெற்றோர்களின் சம்மதத்தின் பேரிலேயே அட்வான்ஸ் கொடுத்து, பெண்ணை அழைத்துக் கொள்வார்களாம்.

குடும்பத்தில் இவள்தான் மூத்தவளாம்.

நான் பார்த்தபோதே அவளுக்கு முப்பது வயதிருக்கும்.

சினிமா நடிகைகளைப் போல, அவள் தன்னுடைய வயதை மறைக்கவில்லை.

அவர்களுடைய பக்கத்து வீட்டில் இருந்து ஒரு பெண்ணைத் தரகர்கள் தேர்ந்தெடுத்தார்களாம்.

அந்தப் பெண்ணின் பெற்றோர்களும் ஒப்புதல் கொடுத்து விட்டார்களாம்.

அந்தப் பெண், மல்லிகாவிடம் வந்து, தான் புறப்படுவதைச் சொல்லிக் கொண்டதாம்.

''இப்படியே எவ்வளவு நாளைக்குக் குடும்பம் சோத்துக்கும் தண்ணிக்கும் கஷ்டப்படுகிறது? நான் ஒருத்தி கெட்டுப் போனாலும் குடும்பமாவது நல்லா இருக்கட்டும். எப்படியும் மாசம் ஐந்நூறு ரூபாய் வீட்டுக்கு அனுப்புவதாகச் சொல்கிறார்கள். எனக்குக் கிடைப்பதில் நானும் கொஞ்சம் அனுப்ப முடியும். அவர்களாவது சாப்பட்டுக்குக் கஷ்டமில்லாமல் இருக்கட்டும்," என்றாளாம் அந்தப் பெண்.

மல்லிகாவுக்குக் கண்ணீர் வந்து விட்டதாம்

'நாமும் இப்படிப் போனால், மற்றச் சகோதரிகள் நிம்மதியாகச் சாப்பிடுவார்களே!' என்று கருதினாளாம்.

பக்கத்து வீட்டுப் பெண்ணிடம் சொல்லிவிட்டுத் தரகர்களை ஒரு நாள் அங்கே தங்க வைத்தாளாம்.

இரவெல்லாம் தன் அப்பா அம்மாவிடமும், சகோதரிகளிடமும் இது பற்றியே பேசினாளாம்.

எல்லோரும் அழுதார்களாம்.

''மானமும் போய், உடம்பும் போய்விடுமே,'' என்றார்களாம்.

''ஏதோ முருகன் விட்ட வழி. எப்படியாவது சமாளித்துக் கொள்கிறேன். உங்கள் அனைவருக்கும் கட்டிக் கொள்ள மாற்றுப் புடவையாவது கிடைக்கும். சாப்பாட்டுக் கஷ்டமும் இராது!'' என்று சொல்லிச் சம்மதிக்க வைத்தாளாம்.

தரகர்களும் தப்பான ஆட்கள் இல்லையாம்.

சொன்ன மாதிரியே அனுப்புகிறார்களாம்,

அவள் தொழிலுக்கு வந்து, இரண்டு வருஷ காலமாகி விட்டதாம்.

இரண்டு முறை போலீசார் பிடித்துக் கொண்டு போய், அபராதம் போட்டார்களாம்.

சில நாட்களில் மூன்று பேர், நான்கு பேரோடு கூடப் போக வேண்டியிருக்குமாம்.

'செத்துப் போகலாம்!' என்பது போல், உடம்பு வலிக்குமாம்.

எல்லோரும் போன பிற்பாடு கட்டிலில் படுத்துக் கொண்டு அழுவாளாம்.

எப்படியோ குடும்பம் சந்தோஷமாக இருக்கிறது என்பதில் அவளுக்குத் திருப்தியாம்.

அவளோடு கூட வந்த கிராமத்துப் பெண் பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் பாங்க்கில் வைத்திருக்கிறாளாம். தனியாகப் பத்தாயிரம் ரூபாய் ஊருக்கு அனுப்பி விட்டாளாம்...

இவளும் இதுவரையில் பதினெட்டாயிரம் ரூபாய் அனுப்பி இருக்கிறாளாம்.

மூன்று தங்கைகளுக்குக் கல்யாணம் ஆகி விட்டதாம். மூன்றுக்கும் அவள் போய் வந்தாளாம். கூட இரண்டு ஏக்கர் நிலம் வாங்கியிருக்கிறாளாம். ஆயில் பம்ப் செட் போட்டு விட்டார்களாம்.

- இவ்வளவையும் அவள் சொன்னாள், சுவாமி.

''நீ இந்தத் தொழில் செய்கிறாய் என்று ஊராருக்குத் தெரியுமா?'' என்று கேட்டேன்.

''தெரியாமல் இருக்குமா? தண்ணீருக்குள்ளே மூச்சு விட்டாலும், தலைக்கு மேலே வந்துதானே ஆக வேண்டும்? தாள முடியாத வறுமையில், யார் யாரைப் பார்த்துக் கேலி செய்ய முடிகிறது? எங்கள் கிராமவாசிகள் நல்லவர்கள். வீணாகக் கேலி செய்ய மாட்டார்கள்! 'பாவம்' உன் மூத்த மகளுக்குக் கோயில் கட்டிக் கும்பிடணும்!' என்று என் அப்பாவிடம் சொல்வார்களாம். நான் இன்னும் சம்பாதித்துக் கொடுப்பேன் என்றுதான் என் மூன்று சகோதரிகளையும் மணந்து கொண்டார்கள் மாப்பிள்ளைகள். போதாதா?'' என்றாள் அவள்.

சுவாமி! பொருளாதாரக் கொடுமையால் பகிரங்கமாகத் தொழில் செய்ய வந்து விட்ட அவள் எங்கே?

திமிர் பிடித்துச் சோரம் போன இந்த நாய் எங்கே?

அந்த ஐந்நூறு ரூபாயை ஒருவன் கொடுத்து, அவளை வைப்பாட்டியாக வைத்துக் கொண்டிருந்தால், அவள் பத்து மடங்கு சந்தோஷத்தோடு இருந்திருப்பாள்.

நானே அந்தக் காலத்தில் அவளைச் சந்தித்திருந்தால், அவளும் நன்றாக வாழ்ந்திருப்பாள், நானும் வாழ்ந்திருப்பேன்.

அந்தக் குடும்பத்தை நான் காப்பாற்றி இருப்பேன்.

விதி, அவளை ஒரு கிணற்றிலும், என்னை ஒரு கிணற்றிலும் தள்ளி விட்டது.

வறுமையினால் ஒருத்தி கெட்டுப் போனால், அது எனக்குப் புரிகிறது, சுவாமி.

கணவன் சக்தியுள்ளவனாக இருந்தும், லீலா விநோதமே சுகம் என்று போகிறவளை என்னவென்று சொல்வது?

மல்லிகாவை நான் குடிக்கச் சொன்னேன்.

அவள் அறவே மறுத்து விட்டாள்.

வருகிறவர்கள் பீரும் சாப்பிடுவார்கள், விஸ்கியும் சாப்பிடுவார்கள் என்பதால்தான், இரண்டும் கொண்டு வரப்பட்டதாம். அவளுக்காக அல்லவாம்.

அவளோடு நான் உறவு கொள்ளவில்லை.

எத்தனையோ பேர் முத்தமிட்ட அந்த உதடுகளில் நான் முத்தமிடவில்லை.

அவள் அருவருக்கத் தக்கவளல்ல என்றாலும் எனக்கென்னவோ பிடிக்கவில்லை.

இரவு வெகு நேரம் வரையிலே அவளோடு நான் பேசிக் கொண்டிருந்து விட்டு விடைபெற்றேன்.

அறைக்கு வந்து பார்த்தால், அப்பாவும், மகளும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

மார்பில் ரவிக்கையே இல்லாமல் அவள் உட்கார்ந்திருந்தாள்.

என்னைக் கண்டதும், நல்ல குடிபோதையில், ''என் கண்ணா!'' என்று ஓடி வந்தாள்.

''ஒரே புழுக்கமாக இருந்ததால், ரவிக்கையைக் கழட்டிவிட்டேன்!'' என்றாள்.

நான் அவளிடம் ஒன்றும் பேசிக் கொள்ளவில்லை. அவளுடைய அப்பாவும் என்னிடம் எதுவும் பேசவில்லை.

அப்பாவும் மகளும் வெகு நேரம் விளையாடிக் கொண்டிருந்தார்கள் போலிருக்கிறது.

அவர் எழுந்து போய் விட்டார்.

நான் கையில் கொண்டு வந்திருந்த விஸ்கியைக் கொஞ்சம் குடித்துவிட்டு, சாப்பாட்டைக் கொண்டு வரச் சொல்லிச் சாப்பிட்டேன்.

அவள் என் மீது விழுந்தாள், புரண்டாள், அழுதாள், என்னென்னமோ செய்தாள்.

நான் 'இது கடைசி இரவு' என்ற தெளிவான முடிவுக்கு வந்து விட்டேன்.

மறுநாள் காலையில் அவளைத் தூக்கி நிறுத்திக் குளிக்க வைத்தேன்.

ஹோட்டல் மானேஜருக்கு டெலிபோன் செய்து பில் போடச் சொன்னேன்.

''இன்னும் பத்து நாள் தங்குவோமே,'' என்றாள்.

''போதுமடா சாமி!'' என்றேன்.

அன்றிரவே நாங்கள் சென்னைக்குப் புறப்பட்டோம்.

அப்பா மிகவும் பவ்யமாக வந்து வழியனுப்பினார். அப்போதும் அவர் மிதந்து கொண்டுதான் இருந்தார்.

''என் கண்ணே!'' என்று மோகனாவைத் தோடவும் வந்தார்.

''சீச்சீ, என்னைத் தொட வேண்டாம். ராத்திரிப் பண்ணுன கூத்துப் போதும்,'' என்றாள் அவள்.

என்ன கூத்தோ? அந்தப் பகவானுக்கே வெளிச்சம்.

இனி எனக்கென்ன? நான் தெளிவாகவே ஒரு முடிவுக்கு வந்து விட்டேன்.

'இவளோடு நமது உறவு அறுந்தது.' என்று எண்ணிக் கொண்டே டாக்சியில் ஏறினேன்.

சென்னை வந்து சேர்ந்தோம்.

வீட்டுக்குள் நுழைந்ததும், இவ்வளவு துயரங்களுக்கிடையே பகவான் எனக்குச் செய்த உதவியைப் பாருங்கள்.

அம்மாவுக்கு உடல் நலமில்லை என்று தந்தி வந்திருந்தது.

அகப்பட்டது சாக்கு என்று நான் விடைபெற்றேன்.

## 6

**தூ**த்துக்குடி... நான் பிறந்த ஊர்... நான் ஆடிவிளையாடிய அந்தப் புனித இடம் - என்னைக் கேலிச் சிரிப்போடு வரவேற்றது.

வீட்டுக்கு ஓடினேன், தாயைப் பார்த்தேன். சுவாமி! அவர்கள் நன்றாகவே இருந்தார்கள். தந்தியும் அவர்கள் கொடுத்ததல்ல.

என்னைப் பார்த்ததும், அப்பா முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

ஏன் திருப்பிக் கொள்ள மாட்டார்?

கருதி வளர்த்த பிள்ளை, தான் பிடித்த மூப்பாகத் தட்டுக் கெட்டுத் தடுமாறுவதைக் கண்டு, எந்த அப்பனுக்குத் தான் மனம் பொறுக்கும்?

அவர் உள்ளுக்குள்ளேயே குமுறினார். ஆனால், தாய் அப்படியல்லவே; அவள் ஒரு இலட்சிய தேவதையாயிற்றே.

''மகனே! இளைத்துக் கருத்துப் போய்விட்டாயே!'' என்று ஏங்கி ஏங்கி அழுதாள்.

எப்போதுமே தாயின் கண்கள் விசாலமானவை.

மகன் பருத்துப் போயிருந்தால்கூட, இளைத்துப் போயிருப்பதாகத்தான் அவளுக்குத் தோன்றும்.

யாரிடம் நான் எதைச் சொல்வேன்?

பிறரிடம் சொல்லக் கூடிய விஷயங்களா என் வாழ்க்கையில் நடந்தன?

கெட்ட கனவு - அதிலும் ஊமை கண்ட கனவுகள்.

தூத்துக்குடியில் என் அப்பா பெரிய உத்தியோகஸ்தர் இல்லையென்றாலும், அவரை எல்லோரும் மதிப்பார்கள். காரணம், அவருடைய நடத்தை.

நடத்தை ஒழுங்காக இருந்துவிட்டால், படிக்காதவனுக்கும் ஒரு மரியாதை உண்டு.

நடத்தை கெட்டவன் அதிகாரியானாலும், அவன் நாயினும் கீழாகக் கருதப்படுவான்.

என்னைப் பற்றிய விஷயங்களை நான் அப்பாவிடம் சொல்ல முடியும் என்று நம்பவில்லை. அம்மாவிடம் சொல்வதற்கான நேரத்தைத்தான் எதிர்பார்த்தேன்.

அன்றைக்கு இரவு வேலை, அப்பாவுக்கு. அம்மா எனக்குச் சாப்பாடு போட உட்கார்ந்தார்கள்.

நானே பேச்சுக் கொடுப்பதா?

இல்லை. அவர்களாகவே ஆரம்பித்தார்கள்.

''ஏன்டா மகனே, பிறந்தது ஒரு பிள்ளையும் பெண்ணும். ஏன் இப்படி அவசரப்பட்டு, எதிலேயோ போய் விழுந்து விட்டாய்? தங்கக் கட்டி மாதிரிப் பெண்ணெல்லாம், 'நான், நீ என்று காத்துக் கொண்டிருக்கும் போது' நமக்கு இது தேவைதானா? மருமகள் என்று நான் வீட்டிலே கொண்டு வந்து வைத்துக் கொள்ளவும் முடியவில்லை. உன்னை அடிக்கடி பார்க்கவும் முடியவில்லை.

அப்பா என்னவோ கோபமாக இருப்பதாக நீ நினைக்கிறாய். அவர், பாவம். ராத்திரிக்கு ராத்திரி தனியாகப் படுத்து அழுகிறார். நான்தான் அவரைச் சமாதானப்படுத்திக் கொண்டிருக்கிறேன். அடிக்கடி அவர் சொல்கிறார் : 'வீட்டுக்கு வரப்பொற மருமகப் பிள்ளையைத்தான் மகனாகவும் நினைத்துக் கொள்ள வேண்டும்!' என்று. பெத்தும் பெறாத கதையாகப் போய் விட்டாயே, அப்பா!'' என்று கண்ணீர் வடித்தபடியே சொன்னார்கள் என் தாயார்.

நானும் சாதத்தை அள்ளுகிற மாதிரி, தலையைக் குனிந்து கொண்டு, மளமளவென்று கண்ணீர் சொரிந்து கொண்டிருந்தேன்.

உண்மையில் சொல்கிறேன், சுவாமி! அன்றையச் சாப்பாட்டுக்கு என் கண்ணீர்தான் உப்பு.

நான் கண்களைத் துடைத்துக் கொண்டு, ''அம்மா! நான் ஏதோ அவசரத்தில் செய்து விட்டேன். நம்பக் கூடாததை நம்பி மோசம் போய் விட்டேன். அவளொரு ஓடுகாலி. எவனுடனேயோ ஓடிவிட்டாள். எல்லாம் நல்ல காலத்துக்கு என்று தான் நான் புறப்பட்டு வந்துவிட்டேன். நீங்கள் பார்த்து எதைச் சொன்னாலும், கட்டிக் கொள்கிறேன். அம்மா!'' என்றேன்.

''நிஜமாகத்தான் சொல்கிறாயா, தம்பி? பின்னால் அதுவும் இருக்கட்டும். இதுவும் இருக்கட்டும் என்று வந்தால் அசிங்கமாகப் போய்விடுமே!'' என்றார்கள் அம்மா.

நான் உடனே முழு விவரத்தையும் அவர்களிடம் சொல்லி விட்டேன்.

'அது சட்ட பூர்வமான கல்யாணம் அல்ல. ஆகவே, செல்லாது!' என்று அவர்களை நம்ப வைத்து விட்டேன்.

ஈன்ற பொழுது பெரிது உவந்த தன் மகனை இப்போது தான் அவர்கள்* சான்றோனாகப் பார்த்தார்கள்.

அன்றிரவு அப்பாவும், அம்மாவும் தனியாகப் பேசட்டும் என்று நான் வாசலில் பாயைப் போட்டுத் தனியாகப் படுத்து விட்டேன். என்சகோதரியை உள் அறையில் படுக்கச் சொல்லி விட்டேன்.

இரவெல்லாம் அவர்கள் என்ன பேசினார்களோ, தெரியாது. காலையில் என் அப்பா மிகவும் உற்சாகமாக இருந்தார்.

நான் திருமணம் செய்து கொண்டது ஊராருக்குத் தெரிந்தது போலவே, கைகவிழுவி விட்டதும் தெரிந்து விட்டது.

பெண் கொடுப்பவர்கள் சும்மா இருப்பார்களா?

இப்போதெல்லாம் பிரம்மா பெண்களைத்தானே அதிகமாகச் சிருஷ்டிக்கிறான்?

எனக்கு அப்பவோடு பிறந்த அத்தையும் கிடையாது அம்மாவோடு பிறந்த மாமனும் கிடையாது.

தூரத்து உறவில் ஒரு பெண். பெயர் காளியம்மை.

அவளைப் பார்க்கலாம் என்று என்னை அழைத்தார்கள்.

''நான் ஏன் பார்க்க வேண்டும்? நீங்கள் பார்த்தால் போதும்!'' என்று சொல்லி விட்டேன்.

பார்த்தார்கள், பேசினார்கள். முடித்து விட்டார்கள்.

நான் மோகனாவுக்கு ஒரு கடிதம் எழுதினேன்.

என்னை மறந்து விடும்படியும், அவள் இஷ்டப்படியே எங்கு வேண்டுமானாலும் அலையும்படியும், எங்களுக்குள் நடந்த திருமணம் செல்லாது என்றும், அதில் விரிவாகக் குறிப்பிட்டேன்.

அவளும் சும்மா இருப்பாளா? பதில் எழுதினாள்.

என்னைத் தொலைத்துத் தலை முழுகுவதற்குத்தான் அந்தத் தந்தியையே கொடுக்க வைத்தாளாம்.

தந்தி கொடுத்தது யார் தெரியுமா? அந்தப் பக்கத்து வீட்டுப் பையன்.

'என்னை நினைத்தால் இடுப்பில் உதைப்பேன்; நான் உன்னை நினைத்தால் உதை' என்ற கதையாகிவிட்டது.

ஆனாலும், பாருங்கள், சுவாமி! இவ்வளவு ஆன பிறகும், அவளிடம் அனுபவித்த சுகம் அவளை அடிக்கடி நினைக்க வைத்தது.

முதன் முதலில் ஒருவன் எந்தப் பெண்ணைத் தொடுகிறானோ, அது சாக்கடையாக இருந்தாலும், சந்தனமாகத் தோன்றும்.

அவளை நான் மிகவும் சிரமப்பட்டுத்தான் மறக்க வேண்டியிருந்தது.

ஒரு நல்ல நாளில் எனக்கும் காளியம்மைக்கும் திருமணம்.

வந்திருந்தவர்களெல்லாம் என்ன வாழ்த்துச் சொன்னார்கள், தெரியுமா?

''நல்ல வேளையப்பா, எங்கேயோ போய் விழுந்து, எப்படியோ எழுந்து வந்து விட்டாய்!'' என்பதுதான்.

காளியம்மையின் கழுத்தில் நான் தாலி கட்டும்போது, மேள தாளங்கள் முழங்கின. பெரியவர்கள் மஞ்சள் அரிசி தூவினார்கள். தாய்மார்கள் குலவை யிட்டார்கள்.

சுவாமி! இந்தத் திருமணம் எங்கே? அந்தத் திருமணம் எங்கே?

எவளோ ஒருத்தியை இழுத்துக் கொண்டு போய்த் தனியாகக் கோவிலில் மாலை மாற்றுவதும் ஒரு திருமணமா?

இந்து சாஸ்திரத்தின் ஆசீர்வாதத்தோடு நடைபெறும் திருமணமே, திருமணம்.

அந்தக் குடும்ப வாழ்க்கையில் வில்லங்கங்கள் வரலாம், வேதனைகள் வரலாம். ஆனால், அந்த பந்தத்தில் ஒருவரை விட்டு ஒருவர் ஓடும் நினைப்பு வராது.

காரணம், கோடானு கோடித் தேவர்கள் முன்னிலையிலும், நூற்றுக் கணக்கான உறவினர் சாட்சியிலும் நடைபெறும் திருமணம் அல்லவா!

கலகலப்பான அந்தத் திருமண வீடு, எனக்குக் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.

ஒரு தவறைச் செய்தவன் தான், ஒரு நியாயத்தைப் புரிந்து கொள்கிறான்.

''மகனே! நீ பட்டினத்தில் வேலை பார்த்து போதும். தூத்துக்குடியிலேயே தங்கி விடு'' என்றார், என் தந்தை

எனக்கென்னவோ, காளியம்மை கழுத்தில் தாலி கட்டிய பிறகும், மோகனாவை ஒரு தரம் பார்க்க வேண்டும் போலிருந்தது.

இது என்ன சபலம்?

அனுபவப் பட்டவர்கள் மட்டுமே, சுவாமி! இதை உணர முடியும்.

ஆனாலும், என் பெற்றோர்கள் என்னைச் சென்னைக்குப் போக அனுமதிக்கவில்லை.

காளியம்மையோடு நடந்த சாந்தி முகூர்த்தத்தில் எனக்கு ஒரு புது அனுபவம் ஏற்பட்டது.

இவளது கூச்சம் எங்கே, நாணம் எங்கே?

இதெல்லாம் மோகனாவிடம் அன்றைக்கு இல்லையே?

நான் மெதுமெதுவாக மோகனாவை மறக்கத் தொடங்கினேன்.

காளியம்மை எப்படி இருப்பாள் என்று நான் உங்களுக்குச் சொல்லவில்லையே!

மா நிறம். அதிகக் கனமும் இல்லை, ஒல்லியும் இல்லை. நியாயமான உயரம், எடுப்பான மூக்கு. பளபளப்பான கண்கள்.

முதலில் நான்கைந்து நாட்கள் அவள் மிகவும் பணிவாகத்தான் இருந்தாள்.

ஒரு நாள் என் அம்மா வற்றல் போட்டு, வெய்யிலிலே காய வைத்திருந்தார்கள். மழை விழுந்தது. அவள் அதை எடுக்க மறந்து விட்டாள்.

"ஏம்மா, மழை பெய்கிறது. பார்த்துக் கொண்டிருக்கிறாயே..." என்றுதான் என் அம்மா கேட்டார்கள்.

அவளுக்குப் பொல்லாத கோபம் வந்து விட்டது.

அப்போது தான், 'அவள் கொஞ்சம் குணங்கெட்டவளாக இருப்பாளோ' என்ற சந்தேகம் எனக்கு வந்தது.

பெண் ஒரு விசித்திரமான படைப்பு. ஒன்றிருந்தால் ஒன்றிருப்பதில்லை. குணம் நன்றாக இருந்தால், நடத்தைக் கோளாறு. நடத்தை நன்றாக இருந்தால், குணக்கேடு. இரண்டும் நன்றாக இருந்தால் குரூபி. மூன்றும் ஒன்றாக இருந்து விட்டால், மணம் முடிக்க முடியாத வறுமை.

கெட்டுத் திரும்பிய பிள்ளைக்குத் தாய் தகப்பன் மீது அளவு கடந்த விசுவாசம் இருக்கும்.

ஆனால், புதிதாக வந்த மருமகளுக்கு அது எங்கிருந்து வரப்போகிறது?

'கனியை எடு,' என்றால், காயை எடுப்பாள் ; 'சாப்பாடு சரியில்லை' என்று தட்டைப் போட்டு உடைப்பாள்; 'என் தாய் வீட்டில் நான் ராஜத்தி மாதிரி வாழ்ந்தேன்' என்பாள் ; 'என்னால் இந்த நாற்றச் சோற்றைத் தின்ன முடியாது ! என்பாள் ; 'பொழுது விடிந்தால் கொத்தவரங்காயும், முருங்கைக்காயும் தான் உங்களுக்குக் கிடைக்கிறது !' என்பாள்.

என் தாயார் சமையல் செய்யும்போது கூடமாட வேலை செய்ய மாட்டாள்.

நான் ஏதாவது கேட்டால், ‘‘உங்களுக்கு ஏதாவது புத்தி இருக்கிறதா?’’ என்பாள்.

‘‘இதோ பார், மகனே! அவளுக்கு எதுக்குக் கஷ்டம்? நீங்கள் வேண்டுமானால் தனிக் குடித்தனம் போய் விடுங்கள்.’’ என்றார் என் ,தாயார்.

‘‘தனிக் குடித்தனமா? பிறகு நான்தான் சமையல் செய்ய வேண்டும்.’’ என்றேன் நான்.

சுவாமி! இந்த நேரங்களிலே எல்லாம், நான் ஒரு நாஸ்திகனாகவேதான் மாறிக் கொண்டிருந்தேன்.

‘நாம் இறைவனுக்கு என்ன குற்றம் செய்தோம்? அவன் ஏனிப்படி நம்மைத் தண்டிக்கிறான்?’ என்று எண்ணிக் கலங்கினேன்.

‘உழுத மாடு ஊருக்குப் போனால் ஏரும் கலப்பையும் எதிரே வரும்’ என்பார்கள்.

‘எப்போது செய்த பாவமோ இப்போது வந்து எதிரொலிக்கிறது’ என்பார்கள்.

பாவங்களே செய்யாத ஒருவன், தண்டனைகளை அனுபவிப்பதும், பாவங்களை மட்டுமே செய்த ஒருவன், பெரும் பரிசுகளை அனுபவிப்பதும்தான் இறைவனுடைய இயக்கம் என்றால், இறைவன் இருப்பது பற்றியே சந்தேகம் வராதா, சுவாமி?

காளியம்மை, பெயருக்கேற்ப, மகாகாளியாகவே விளங்கினாள்.

என் தாயாரும் வேறு வழியில்லாமல், தனிக் குடித்தனம் வைப்பதற்கு ஏற்பாடு செய்து விட்டார்கள்.

தலை எழுத்தை நொந்து கொண்டு, நானும் சம்மதித்து விட்டேன்.

இனி என்ன செய்வது? அதற்காக இன்னொரு திருமணமா செய்து கொள்ள முடியும்?

தசரதன் கடைசியாகத் தேடிக் கொண்டது, கைகேயியைத்தானே?

தனிக் குடித்தனம் போயாகி விட்டது.

அம்மாவும் அப்பாவும் கட்டிக் கொடுத்த அரிசியும் பருப்பும் எத்தனை நாளைக்கு வரும்?

எங்களைக் காப்பாற்றிக் கொள்ள நானே ஒரு வேலை தேட வேண்டியதாயிற்று.

தூத்துக்குடியிலோ, சிவகாசியிலோ வேலை இல்லாதவர்களையே பார்க்க முடியாது.

நானும் வெறுஞ் சோறு தின்ன விரும்பாமல், வேலை தேடினேன்.

விளம்பரங்களைப் பார்த்து வெளியூர்களுக்குக் கடிதம் எழுதினேன். 'இல்லை' என்ற பதில் நிறைய வந்தது.

கடைசியில் ஒரு கடிதம் எனக்கு ஆத்ம திருப்தி அளித்தது.

சென்னை மவுண்ட் ரோடிலுள்ள ஒரு பெரிய புத்தகக் கடையில் விற்பனை நிர்வாகியாக என்னை ஏற்றுக் கொள்வதாக அதில் கண்டிருந்தது.

மாதச் சம்பளம் ரூபாய் நானூறு.

சென்னை நகரில் ஆள் கிடைக்காமலா அந்தக் கம்பெனி என்னைத் தேர்ந்தெடுத்தது?

இல்லை, அந்தக் கம்பெனியின் சொந்தக்காரரும் தூத்துக்குடிக்காரர், ஊர்ப்பற்று ! அவ்வளவுதான் !

காளியம்மையிடம் சொன்னேன்.

''பத்திரமாகப் போய் வாருங்கள். அதுவரையில் என் அம்மா வீட்டில் சாப்பிட்டுக் கொள்கிறேன்,'' என்று அவள் சொன்னபோது கண்ணீர் வடித்து விட்டாள்.

என்னதான் கொடுமைக்காரியாக இருந்தாலும், அவள் ஒரு குலமகள். குடும்பப் பெண். கணவனைப் பிரிவதில் உள்ள சிரமத்தை அவள்தான் உணருவாள்.

ஆனால், வருஷக் கணக்கில் கணவன் பிரிந்திருந்தாலும், எவனையும் ஏறெடுத்துப் பார்க்க மாட்டாள்.

நான் சென்னைக்குப் புறப்பட்டேன்.

## 7

இப்போதெல்லாம் எனக்கு மோகனா லாகிரி அதிகம் இல்லை. இருந்தாலும், அவள் என்ன செய்கிறாள் என்று பார்க்க வேண்டும் போல் ஓர் அரிப்பு இருந்தது. அவளைப் பிரிந்து எட்டு மாதங்களுக்கு மேல் ஆகி விட்டதால், ஆசை துளியும் இல்லை.

ஆனால், அவள் வயிற்றில் வளர்ந்ததே என் குழந்தை, அந்தக் குழந்தை இந்நேரம் பிறந்திருக்க வேண்டுமே?

'சீ! பதிதை ! அது நமக்குத்தான் பிறந்தது என்பது என்ன நிச்சயம்?' என்றது ஒரு மனது.

'இல்லை, நம்முடைய குழந்தைதான்' என்றது மறு மனது.

சென்னையில் இறங்கியதும் மவுண்ட ரோடு அலுவலகத்துக்கு வந்து சேர்ந்தேன்.

அந்த முதலாளி என் அப்பாவுக்கு மிகவும் வேண்டியவர் என்பது, அப்போதுதான் தெரிந்தது.

எங்கள் தென் பாண்டி நாட்டில் ஒருவரை ஒருவர் 'முதலாளி' என்றுதான் அழைத்துக் கொள்வார்கள்.

அங்கு போய்ச் சேர்ந்ததிலிருந்து மோகனா ஞாபகமே எனக்கு அதிகமாகி விட்டது.

அழகர் மலைக் குரங்கு திருப்பதி வரைக்கும் வருகிறதே என்ன செய்ய?

நல்ல வேளையாக அன்றைக்கு அஷ்டமி. ''இன்றைக்கும் நாளைக்கும் நீ வேலையில் சேர வேண்டாம். நாளை மறு நாள் சேரலாம்,'' என்றார் முதலாளி.

இது நல்ல காலத்துக்கோ, கெட்ட காலத்துக்கோ...

நேரே முன்பு நான் தங்கியிருந்த பழைய அறைக்குப் போனேன். பக்கத்து அறையில் என் பழைய நண்பன் இருந்தான். என்னைப்பற்றிய விவரங்களெல்லாம் அவனுக்குத் தெரியும். எனக்குத் திருமணம் ஆனதும் தெரியும்.

''மோகனாவைப் பார்க்க வேண்டும்,'' என்று அவனிடம் சொன்னேன்.

நாங்கள் இருவருமே ஒரு சினிமாக் காட்சிக்குத் தயாரானோம்.

பெரிய சாமியார்களைப் போல 'மேக்அப்' போட்டுக் கொண்டோம்.

அவனுக்குக் கொஞ்சம் ஜோசியம் தெரியும்.

அவனைக் குருவாக்கி, நான் சீடனானேன்.

சுவாமி! நாடகமே உலகம். சினிமாக்களைப் பார்த்துப் பார்த்து எங்களுக்கு இந்தப் புத்தி வந்தது.

நாங்கள் மோகனா வீட்டை நெருங்கியபோது, மணி பன்னிரண்டு. கதவு தாழிடப் பட்டிருந்தது.

''பவதி! பிக்ஷாந்தேகி!'' என்று குரல் கொடுத்தோம். யாரோ ஒரு பெண் ஓடி வந்து கதவைத் திறந்தாள்.

“இது குழந்தையுள்ள வீடுதானே...?” என்று கேட்டான், என் நண்பன்.

“ஆமாம்,” என்றாள், அவள்.

“எங்களுக்கு ஒரு பிடி கவளம் கொடுங்கள்!” என்று கேட்டான், அவன்.

அதற்குள், “யாரது?” என்று கேட்டுக் கொண்டே, மோகனா வந்தாள்.

அவளைக் கூர்ந்து கவனித்தேன்.

அடே, அப்பா! அவள் எவ்வளவு பருத்துப் போய் விட்டாள்? உடம்பிலே இரத்தம் நன்றாக ஊறி இருந்தது.

சாதம் கொண்டு வர அவள் உள்ளே போனாள்.

உடனே என் நண்பன் பாட்டுப் பாட ஆரம்பித்தான்.

அங்கு நீ பிறந்ததென்ன
அழகாக வளர்ந்ததென்ன
எங்கிருந்தோ ஒருவன் வந்து
ஏறெடுத்துப் பார்த்ததென்ன
சங்கு முழங்காமல்
சாட்சிகளும் இல்லாமல்
மங்காத்தா கோவிலிலே
மணமாலை இட்டதென்ன
மாலையிட்ட மணவாளன்
வழிமாறிப் போனதென்ன
வயிற்றில் ஒரு குழந்தை
வசமாய் வளர்ந்ததென்ன...

- அவன் பாட்டை முடிக்கவில்லை அதைக் கேட்டபடியே வந்த மோகனா, ''சுவாமி. உங்களுக்கு ஜோசியம் தெரியுமா?'' என்றாள்.

''ஜோசியம் தொழிலல்ல. ஆனால், யாரையாவது பார்த்தால் சொல்ல வேண்டும் போல் தோன்றும்,'' என்றான் அவன்.

''இப்படி உட்காருங்கள், சுவாமி!'' என்று சொன்ன அவள், அந்தச் சோற்றைப் போடாமல், உள்ளே போய்ச் சாப்பாட்டுப் பாத்திரங்களையே கொண்டு வந்து விட்டாள்.

அந்தப் பட்டப் பகலில் அவள் பின்னாலேயே தள்ளாடியபடியே பனியனோடு வந்தான் ஒருவன்.

நான் அந்தக் கண் கொள்ளாக் காட்சியைப் பார்த்தேன்.

அவன் வேறு யாருமல்ல சுவாமி, பக்கத்து வீட்டுப் பையன்.

எங்கள் பாண்டிய நாட்டில் நிரந்தரமாக ஒருத்தியை வைப்பாட்டியாக வைத்துக் கொண்டால், அதை 'ஸ்டாக்காக வைத்துக் கொள்ளுதல்' என்பார்கள்.

அவன் மோகனாவை, 'ஸ்டாக்காகவே!' வைத்துக் கொண்டு விட்டான் போலிருக்கிறது

அவனும் பவ்யமாக, ''வணக்கம் சுவாமி,'' என்றான்.

ஒரு சுவாமியை உற்பத்தி செய்தவனல்லவா? சொல்ல வேண்டியதுதானே.

மோகனா எங்களுக்குச் சாப்பாடு போட்டாள்.

சாப்பிட்டோம்... நான் மட்டும் அதை வெறுப்போடு சாப்பிட்டேன்.

மெதுவாக அந்தப் பையனைக் காட்டி, ''அது யார்?'' என்றேன்.

''என் கணவர்,'' என்றாள்.

சினிமாவில் காட்சி மாறுவது கூடத் தாமதிக்கும், சுவாமி! சிலருக்குக் கணவன் மாறுவது தாமதிப்பதில்லை.

அவளைக் கையைக் காட்டச் சொன்னான் நண்பன். உள்ள கதை அத்தனையும் உரித்து வைத்து விட்டான்.

அவளுக்கு ஆச்சரியமாகப் போய் விட்டது. ''நீங்கள் இங்கேயே தங்க வேண்டும்,'' என்று எங்களைக் கேட்டுக் கொண்டாள்.

''இல்லை. எங்களுக்கு வேலை நிறைய இருக்கிறது,'' என்று சொல்லி, குழந்தையைத் தூக்கி வரச் சொன்னோம்.

அவள் அந்தப் பிஞ்சுக் குழந்தையைத் தூக்கி வந்தாள்.

என் கண்களில் பெருகிய கண்ணீரை நான் மறைத்துக் கொண்டேன்.

ஆடு மாடுகளைப் போல், மனித ஜாதியிலும், தகப்பனுக்குக் குழந்தையைத் தெரியாமல் போய் விட்டால் சஞ்சலமில்லை.

குழந்தை என்னைப் பார்த்துச் சிரித்தது. நான் அதைப் பார்த்து அழுதேன்.

இனி அது யாரை, 'அப்பா!' என்று கூப்பிடப்போகிறது? அதோ, அந்தப் பையனை.

பெற்றவன் பெற முடியாத உரிமையைப் பெறாதவன் பெற்று விடுகிறான்.

''இந்தக் குழந்தைக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது'' என்றான், நண்பன்.

''சரி, போகலாம்,'' என்றேன் நான்.

''நாளைக்கும் நீங்கள் வர வேண்டும்'' என்றாள் அவள்.

அரண்மனைக்காரன் தெரு அறைக்கு வந்ததும், நண்பனின் மடியில் தலையை வைத்து நான் விம்மி விம்மி அழுதேன்.

''அட, முட்டாளே! ஓடிப்போன கழுதையைப் பற்றி சலவைத் தொழிலாளிதான் கவலைப்பட வேண்டும். உருப்படி போட்டவன் ஏன் கவலைப் பட வேண்டும்? இப்படி நாலா பக்கமும் மனதைப் போட்டு வளைத்தால் காலா காலங்களுக்கு நிம்மதியே இருக்காது. பேசாமல் ஓய்வெடுத்துக் கொள். வேலையில் சேர்ந்து இதை மறந்து விடு.'' என்றான், அவன்.

மாலையில் நான் மவுண்ட் ரோடுக்குப் புறப்பட்டேன்.

மனது என்னவோ மோகனாவின் வீட்டுப் பக்கமே தள்ளிற்று. அங்கே சென்று அவளை அடித்து உதைக்க வேண்டும் போல் தோன்றிற்று.

ஆயினும், மனதைத் தேற்றிக் கொண்டு, பஸ்ஸுக்காக ஐகோர்ட் அருகே வந்தபோது, ஒரு வேடிக்கையை நான் கண்டேன்.

வேறு யாரோ ஒரு இளைஞனோடு மோகனா போய்க் கொண்டிருந்தாள்.

அவனைப் பார்த்தால் பெரும் பணக்காரன் மாதிரி இருந்தான். ஆனால், அவர்கள் நடந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

தூரத்தில் நின்று நான் கவனித்தேன்.

ஒரு கை வண்டியிலிருந்து கொஞ்சம் பழம் வாங்கினார்கள். அந்தப் பழத்தைக் கொண்டு போய் ஒரு காரில் வைத்தார்கள்.

அப்போதுதான் அவர்கள் காரில் வந்திருக்கிறார்கள் என்பது புரிந்தது.

பஸ் வந்ததும் நான் மவுண்ட் ரோடு அலுவலகத்துக்குச் சென்று விட்டேன்.

இரவு எட்டு மணிக்கு முதலாளி என்னை அழைத்தார்.

''இதோ பார், நீயும் நம்மூர்ப் பையன்தான், அலுவலகத்தில் தங்கிச் சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட வேண்டாம். நம் வீட்டிலேயே தங்கிக் கொள்ளலாம்,'' என்றார்.

ஒன்பது மணிக்கெல்லாம் அவருடைய வீட்டுக்குப் போய்விட்டேன்.

அருமையான சாப்பாடு. சாப்பிட்டு விட்டு வெளியிலே படுத்திருந்தேன்

இரவு பதினோரு மணிக்கு ஒரு கார் வந்து நின்றது.

நான் ஐகோர்ட் அருகில் பார்த்த அதே கார். அதே வாலிபன் அந்தக் காரில் இருந்து இறங்கினான். அவன் முதலாளியின் மகன் என்பது எனக்கு அப்போதுதான் புரிந்தது.

நான் மரியாதையாகக் கதவைத் திறந்து விட்டேன்.

அவன் நன்றாகக் குடித்திருந்தான். ''யார் நீ?'' என்று கேட்டான்.

விவரத்தைச் சொன்னேன்.

''சரி சரி, படுத்துக் கொள்,'' என்று கூறிவிட்டு, உள்ளே போய் விட்டான்.

## 8

அன்று தசமி.

'ஹரி ஓம்' என்று நான் வேலைக்குச் சேர்ந்தாகி விட்டது.

பிரம்மாண்டமான அந்த நூலகத்தில் கண்காட்சிக்காக அடுக்கி வைக்கப்பட்ட புத்தகங்கள்; அவற்றை விற்பனை செய்வதே என் வேலை.

இப்பொழுதெல்லாம், எவ்வளவு அற்புதமான புத்தகங்கள் வெளி வருகின்றன! எவ்வளவு வண்ண வண்ண அட்டைகள்!

நான் புத்தகங்களை விற்பனை செய்து கொண்டே, என் காளியம்மைக்குக் கடிதம் எழுதுவேன்.

மோகனாவை மறுபடியும் பார்த்த பிறகு காளியம்மையின் மீது, எனக்கிருந்த மதிப்பு பன்மடங்கு பெருகிவிட்டது. அவளுடைய கோபத்தை யெல்லாம் நான் மறந்து விட்டேன்.

'என் கண்மணி' என்றும், 'ராஜாத்தி' என்றும், வருணிக்கத் தொடங்கினேன்.

திடீரென்று ஒரு நாள் அவளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது, தன்னையும் சென்னைக்கு அழைத்துக் கொள்ளும்படி.

எனக்கும் ஆசைதான். பொருள்கள் விற்கின்ற விலையில், நானூறு ரூபாய்ச் சம்பளத்தில், அவளை எப்படிக் காப்பாற்றுவது?

''அடி கண்ணே! எனக்கு மட்டும் ஆசை இல்லையா, என்ன? சம்பளம் கொஞ்சம் உயரட்டும். உன்னை எப்படியும் அழைத்துக் கொண்டு விடுகிறேன்,'' என்று பதில் எழுதினேன். அதற்கு அவள் எழுதிய பதிலில், தன் தூரத்து உறவினர் வீடு சென்னையில் இருப்பதாகவும், அங்கே தான் தங்கிக் கொள்வதாகவும், தன் நகைகளைக் கொஞ்சம் விற்று, பிறகு வீடு பிடித்துக் கொள்ளலாம் என்றும் எழுதியிருந்தாள்.

எனக்கு அதுவும் நல்லதாகக் தோன்றிற்று.

முட்டாளுக்கு முன் யோசனை ஏது?

ஒரு நல்ல நாள் பார்த்து என் அப்பா அம்மாவிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டு வரும்படி அவளுக்கு எழுதினேன்.

சுவாமி! தனியொரு மனிதன் சமுதாய வாழ்க்கையை மேற்கொள்ளும்போது, அவனைப் பின்னக்கூடிய சூழல்கள்,

அவன் சிக்கக்கூடிய சூழல்கள், எத்தனை எத்தனை! ஒரு நாள் என் முதலாளியின் மகன் வெளியே புறப்படும்போது,தன்னோடு வரும்படி என்னையும் அழைத்தான்.

எங்கே மோகனா வீட்டுக்குப் போய்த் தொலைப்பானோ என்று பயந்து, எனக்கு அடிக்கடி சீதபேதியாவதாகச் சொல்லித் தப்பித்துக் கொண்டேன்.

மற்றொரு நாள் ஒரு பார்சலை என்னிடம் கொடுத்து, மோகனாவின் விலாசத்தையும் கொடுத்து, அங்கே கொண்டு போய்க் கொடுத்து விட்டு வரும்படி என்னை அனுப்பினான்.

நான் மெதுவாக என் நண்பனிடம் கொடுத்து, அவனைக் கொண்டு போய்க் கொடுக்க வைத்து விட்டேன்.

வயிற்றுப் பிழைப்புக்கு வேலை செய்கிற ஒருவன், வயிற்றை மட்டும் பார்க்க முடிவதில்லையே, மானத்தையும் பார்க்க வேண்டியிருக்கிறதே!

இந்த மாதிரி நேரங்களில்தான் மனிதர்கள் தலையில் அடித்துக் கொண்டு அழுகிறார்கள்.

'எனக்குச் சாவு வரக் கூடாதா?' என்கிறார்கள்.

'எங்காவது ஓடிப் போய் விடுகிறேன்!' என்கிறார்கள்.

அவலத்திலும் ஓலத்திலும் சிக்கிக் கொண்ட ஆயிரக் கணக்கான மனிதர்களில் நானும் ஒருவன்.

இப்படி நான் ஊசலாடிக் கொண்டிருந்தபோது, அன்றைய ரயிலில் தான் புறப்பட்டு வருவதாகக் காளியம்மையின் தந்தி எனக்குக் கிடைத்தது.

அவளை வரவேற்க நான் ஸ்டேஷனுக்குப் போனேன், மறுநாள் காலை.

அவளோடு அவள் தந்தையும் வந்திருந்தார்.

''அவர்களுடைய தூரத்து உறவினர் வீடு எங்கே இருக்கிறது,'' என்று விசாரித்தேன்.

தம்புச் செட்டித் தெருவில் இருப்பதாகச் சொன்னார் அவள் தந்தை.

வீட்டு நம்பரைக் கேட்டபோது, என் தலையில் இடி விழுந்து விடும் போல் இருந்தது.

மோகனாவை வைத்துக் கொண்டிருந்தானே, பையன் - அவன் வீடே அவர்கள் சொன்ன வீடு.

'அந்த வீட்டுக்குப் போகக் கூடாது !' என்று எப்படிச் சொல்வது?

காரணம் கேட்டால், எதை விளக்குவது?

எனக்கும் அவர்களுக்கும் தகராறு என்று சொன்னால், 'ஏன், எப்படி?' என்று விசாரிப்பார்களே.

மனிதனுக்கு நிம்மதியே இருக்கக் கூடாது போலிருக்கிறது.

''எதற்காக அங்கெல்லாம் போய்த் தங்க வேண்டும்?'' என்று இழுத்தேன்.

''அவள் என் ஒன்றுவிட்ட சின்னம்மா மகள். அவளுக்கு ஒரே ஒரு பையன் மட்டும்தான் உண்டு. கடல் மாதிரி வீடு. வெகு நாட்களாகவே வாருங்கள், வாருங்கள் என்று கடுதாசி எழுதிக் கொண்டிருக்கிறார்கள். மாதக் கணக்கில் தங்கினால் கூட மரியாதையாக வைத்திருப்பார்கள். அங்கே தங்குவதில் கௌரவக் குறைவு ஒன்றுமில்லை. உங்களுக்கு வசதியுள்ள போது வீடு பிடித்துக் கொள்ளலாம்,'' என்றார் என் மாமனார்.

ஏதோ கெட்ட கனவு கண்ட கதையாகி விட்டது.

'ஈஸ்வரா!' என்று நானும் டாக்சியில் ஏறிக் கொண்டேன்.

டாக்சி, தம்புச்செட்டித் தெருவை நெருங்க, நெருங்கக் எனக்குச் சித்தப் பிரமையே வந்து விடும் போலிருந்தது.

நல்ல வேளையாக அந்த வீட்டில் அந்தப் பையன் இல்லை. அவனுடைய தாயார் லட்சுமி அம்மாள் மட்டும்தான் இருந்தார்கள். தந்தை கணேசன் வெளியே போயிருந்தார். பையன் மோகனா வீட்டில் பள்ளி கொண்டிருப்பான் போலிருக்கிறது.

பக்கத்து வீட்டில் நான் இருந்தபோதுகூட, லட்சுமி அம்மாள் என்னைப் பார்த்ததில்லை. தீமையில் அது ஒரு நன்மை.

எல்லாவற்றையும் இறக்கி வைத்துவிட்டு, அவர்களின் டெலிபோன் நம்பரைக் குறித்துக் கொண்டு, 'அலுவலகத்துக்கு நேரமாகி விட்டது,' என்று நான் கிளம்பினேன்.

''நீங்களும் இங்கேயே தங்கலாம், தம்பி!'' என்றார்கள், அந்த அம்மையார்.

''வேண்டாம். முதலாளி வீடு வசதியாக இருக்கிறது!'' என்றேன்.

''அடிக்கடி வந்து பார்த்து விட்டுப் போங்கள்" என்றார் மாமனார்.

''வருகிறேன். இல்லை என்றால் டெலிபோன் செய்கிறேன்,'' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டேன்.

என் டாக்சி மண்ணடியில் திரும்பும்போது, எதிரே அந்தப் பையன் போவதை நான் பார்த்தேன். ஆனால், அவன் என்னைப் பார்க்கவில்லை.

அவனும்தான் சொரணை கெட்ட மழுங்கலாகி விட்டான்.

மோகனாவை எங்கள் முதலாளி மகன் மணிவாசகனோடு மனமொப்பித்தானே அனுப்பியிருப்பான்?

என்னுடைய குலதர்ம பத்தினி காளியம்மையும் கெட்டுப் போவது போன்ற பயம் ஒன்று எனக்கு ஏற்பட்டது.

ஒரு பெண் கெடுவதற்கு, அவளது மனப்போக்கு மட்டும் காரணமல்ல, அமைகின்ற சந்தர்ப்பங்களும் காரணம்.

தனிமையும், வாய்ப்பான சூழ்நிலையும், அழகான இளைஞனும் கிடைத்தால், எந்தப் பெண்ணுக்கும் சிறிது சபலம் வரும். மிக உயர்ந்த பெண்கள் அதை உடனே விலக்கி விடுவார்கள். மற்றவர்கள் விழுந்து விடுவார்கள்.

காளியம்மைக்கு இது புதிய சூழ்நிலை.

பட்டண வாசம், பகட்டான சூழ்நிலை, போதாக் குறைக்கு உபதேசம் செய்யப் பக்கத்து வீட்டில் மோகனா.

யார் எந்த நேரத்தில் எப்படி மாறுவார்கள் என்று யாருக்குத் தெரியும்?

நான் கற்பனைகளை வளர்த்துக் கொண்டபோது புத்தகக் கம்பெனி வந்து விட்டது.

நடைபிணம் போல் இறங்கினேன்.

ஒவ்வொரு வினாடியும் எனக்கு ஒரு யுகமாக இருந்தது.

சிக்கலுக்கு மேல் சிக்கல். சோதனைக்கு மேல் சோதனை.

கள்ளைக் குடித்த குரங்கைத் தேள் கொட்டிய கதையாகி விட்டது.

காளியம்மை பக்கத்து வீட்டுக்குப் போவது போலவும், அங்கு மோகனாவும், பக்கத்து வீட்டுப் பையன் மோகன்லாலும், எங்கள் முதலாளியின் மகன் மணிவாசகனும் குடித்து விட்டு ஆடுவது போலவும், காளியம்மைக்கும் கொஞ்சம் பழகிக் கொடுப்பது போலவும், என்னென்னவோ கற்பனைகள்.

ஒரு நிகழ்ச்சி உண்மையில் நிகழ்ந்து விட்டால் தொல்லை இல்லை. அது நிகழுமோ நிகழுமோ என்று எண்ணிக் கொண்டிருப்பது சித்ரவதை.

ஆனால், நான் நினைத்ததில் பாதி அன்று நடந்து விட்டது.

அன்றிரவு ஒன்பது மணிக்கு நான் லட்சுமி அம்மாளின் வீட்டுக்குச் சென்றபோது, காளியம்மை அங்கே இல்லை.

மாமனார், பனியன் போட்டபடி, வெற்றிலை இடித்துக் கொண்டிருந்தார்.

லட்சுமி அம்மாளின் கணவர் ஒன்பது மணிக்கெல்லாம் மாத்திரை சாப்பிட்டுப் விட்டு படுத்து விடுவாராம்.

''காளி எங்கே?'' என்று கேட்டேன்.

''பக்கத்து வீட்டுக்குப் போயிருக்கிறாள், வந்து விடுவாள். உட்காருங்கள்,'' என்றார்கள்.

உட்காரக் கூடிய சூழ்நிலையா அது?

எனக்குக் கொஞ்சம் துணிச்சல் வந்தது.

லட்சுமி அம்மாளிடம் சொல்லி, ''தயவு செய்து அவளைக் கொஞ்சம் கூட்டி வாருங்கள். நான் அவளை வெளியே கூட்டிச் செல்ல வேண்டும்,'' என்றேன்.

''இருங்க, தம்பி,'' என்று சொல்லி விட்டு, அந்த அம்மையார் போனார்கள். திரும்பிக் காளியம்மையோடு வந்தார்கள்.

வரும்போதே சென்ட் வாசம் மூக்கைத் துளைத்தது.

மோகனா காளியம்மைக்குச் சென்ட் பூசி விட்டிருக்கிறாள்.

'இது முதல் நாள் திருப்பணி, எப்போது கும்பாபிஷேகமோ?' என்று என் மனது கேட்டது.

''சரி, நீ நன்றாகத்தான் டிரஸ் செய்திருக்கிறாய். வா, பீச்சுக்குப் போய் வரலாம்,'' என்றேன்.

''போகலாமா?'' என்றாள், ஆசையோடு.

''புறப்படு,'' என்றேன்.

மீண்டும் ஒரு முறை சீவி முடித்து, என்னோடு புறப்பட்டாள்.

கள்ளங்கபடம் தெரியாத பெண் வெகு சீக்கிரம் ஏமாந்து விடுவாளே என்று என் மனது கலங்கிற்று.

ஒரு டாக்சியில் அவளைப் பீச்சுக்கு அழைத்துப் போனேன்.

ஆள் அரவமில்லாத இடமாகப் பார்த்து இருவரும் இறங்கினோம்.

''அப்பாடி! எவ்வளவு பெரிய பீச்!'' என்றாள்.

கடற்கரையின் உள் வாயிலில் போய் அமர்ந்தோம்.

''எனக்கு இப்போதுதான் ரொம்ப சந்தோஷமாக இருக்கிறது,'' என்றாள்.

''ஆமாம், நீ ஏன் பக்கத்து வீட்டுக்குப் போனாய்?'' என்று நான் கேட்டேன்.

''ஏன், போனால் என்ன...? அதுவும் எம் மாதிரி பொண்ணுதானே!'' என்றாள், அவள்.

''அவளோடு அதிகம் பேச்சு வைத்துக்கொள்ளாதே. அவள் ஒரு நடத்தை கெட்டவள்!'' என்றேன்.

''சீ பாவம்! அவங்க பேச்சைப் பார்த்தா அப்படித் தெரியலே'' என்றாள், அவள்.

''பேச்சிலே எப்படித் தெரியும்? எனக்கல்லவா தெரியும்?'' என்றேன்.

''உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டாள்.

இனி இவளிடம் மறைக்கக் கூடாது என்று எனக்குத் தோன்றிற்று.

நாம் இரகசியங்களை மறைக்க மறைக்க அதிலே ஈடுபட்டவர்கள் அதிகம் ஈடுபடத் தொடங்குவார்கள்.

'நாம் யாரோ ஒருத்தியைக் கட்டிக் கொண்டதும், பிறகு விட்டு விட்டதும், ஊர் முழுக்கத் தெரிந்த விஷயம்தானே? அவள்

இவள்தான் என்று சொல்லி விட்டால், பிறகு காளியம்மை அங்கு போக மாட்டாள் அல்லவா?'

"இதோ பார், காளியம்மை . . ." என்று தொடங்கி, நான் எல்லா விஷயங்களையும் - முன்னுரையில் இருந்து முடிவுரை வரை - சொன்னேன்.

"ஐயையோ! கருமம்! இனி நான் அந்த வீட்டுக்குப் போகவே மாட்டேன்!" என்றாள், அவள்.

"ஒரு நாலைந்து நாட்கள் மட்டும் பொறு. அதற்குள் எப்படியும் ஒரு சிறிய வீடாவது பிடித்து விடுகிறேன்," என்றேன்.

"இனி அந்த வீட்டில் இருக்கவே எனக்குப் பயமாக இருக்கும். அந்தப் பையன் மோகன்லால் எனக்கு முறைப் பையன். திடீரென்று, அவன் குடித்துவிட்டு வந்து, கையைப் பிடித்திழுத்தால், என்ன ஆகும்?"என்று கேட்டாள் அவள்.

"செவிட்டிலே ரெண்டு கொடு. ஏன் பயப்படுகிறாய்?" என்றேன் நான்.

பிறகு அவளைக் கொண்டு போய் இறக்கி விடுவதற்காகத் தம்புச் செட்டித் தெருவுக்குப் போனேன்.

மோகனா வீட்டில் ஒரே சிரிப்புச் சத்தம்.

"பார்த்தாயா, அங்கு நடக்கும் கூத்தை..."என்றேன்.

"கருமம்! கருமம்!" என்றாள்.

அவளை இறக்கி உள்ளே அனுப்பி விட்டு, நான் திரும்பினேன்.

மறுநாள், நான் அங்கே போக முடியவில்லை. மிகுந்த நம்பிக்கையோடு இருந்து விட்டேன்.

அதற்கு அடுத்த நாள் காலையில் டெலிபோன் செய்து, "காளியம்மையோடு பேச வேண்டும்," என்றேன்.

''காளியம்மையா! அவள் உங்களைப் பார்க்கத்தானே வந்தாள். நான்கூட, 'இடம் தெரியுமா?' என்றேன். 'தெரியும்,' என்றாள். அங்கு வரவில்லையா?'' என்று பதறிப் போய்க் கேட்டார், என் மாமனார்.

எனக்கு உடம்பெல்லாம் வியர்த்தது.

''ஏன் அவளைத் தனியாக அனுப்பினீர்கள்?'' என்றேன்.

''இல்லை, இங்கே இருக்க அவளுக்குப் பிடிக்கவில்லை. அதற்காக ஆத்திரத்தோடு டாக்சியை எடுத்துக் கொண்டு வந்தாள்,'' என்றார் அவர்.

''இப்போது எங்கே போய்த் தேடுவது...?'' என்று நடுக்கத்தோடும் கலக்கத்தோடும் கேட்டேன்.

''டாக்சி நம்பர் 4069,'' என்றார் அவர்.

நான் டெலிபோனை வைத்து விட்டேன்.

பின்னால் கேள்விப்பட்டதை சொல்கிறேன் சுவாமி.

அன்று மதியம் மூன்று மணிக்கு லட்சுமி அம்மாள் வீட்டு உள் ஹாலில் அவள் தூங்கிக் கொண்டிருந்தாளாம். குடி வெறியில் உள்ளே நுழைந்த மோகன்லால், அவள் மார்பகத்தில் கை வைத்து உதட்டில் முத்தமிட்டுவிட்டானாம். அவள், அவனை ஓங்கி அறைந்துவிட்டு, டாக்சி எடுத்துக் கொண்டு என்னைத் தேடிப்புறப்பட்டிருக்கிறாள்.

'எங்கே போய் அலைகிறாளோ என்று நான் துடித்தேன்.' போலீஸ் ஸ்டேஷனிலே சொல்லலாமா என்று நினைத்தேன்.

நம் ஊர் போலீஸ்காரர்கள் எதைக் கண்டு பிடித்தார்கள், இதைக் கண்டு பிடிக்க?

பைத்தியக்காரன் மாதிரி அந்த டாக்சியைத் தேடி அலைந்தேன். கடைசியில் தேனாம்பேட்டை போலீஸ் ஸ்டேஷன் அருகில் அதைக் கண்டு பிடித்தேன்.

பெண்களையும், சாராயப் புட்டிகளையும் ஏற்றிச் செல்வதில் பிரபல டாக்சியாம் அது.

டிரைவரை லாக் அப்பில் வைத்திருந்தார்கள்.

இன்ஸ்பெக்டரின் அனுமதியோடு, அவனிடம் போய் இடம், அடையாளம் எல்லாம் சொல்லிக் கேட்டேன்.

'' அந்தப் பெண் பீச் ரோட்டிலே இறங்கி விட்டாள். சத்தியமாக வேறு ஒன்றும் எனக்குத் தெரியாது' என்றான் அவன்.

நான் தலையில் அடித்துக் கொண்டு, முதலாளி வீட்டுக் திரும்பினேன்.

இரவு முழக்க அழுதுகொண்டே படுத்திருந்தேன்.

காலையில் எனக்கு டெலிபோன் வந்தது. ''காளியம்மை வந்துவிட்டான்' என்று.

ஆனால் சுவாமி! டெலிபோனில் என்னோடு பேச மறுத்து விட்டாள்.

அவள் ஆளே மாறி இருப்பதாக மாமனார் சொன்னார்.

என்னால் அலுவலகத்தில் ஒரு மணிநேரம்கூட உட்கார முடியவில்லை.

வருவது வரட்டும்' என்று, நேரே தம்புசெட்டித் தெருவுக்குப் போனேன்.

நான் உள்ளே நுழையும்போது, மோகனா, காளியம்மைக்கு தலைவாரி பூச்சூட்டிக் கொண்டிருந்தாள்.

என்னைப் பார்த்து ஒரு அசட்டுச் சிரிப்பு அவள் சிரித்தாள்.

''இதோ பார், காளியம்மை! உன் கணவர் வந்திருக்கிறார்?'' என்று அலட்சியமாகக் கூறினாள்.

''யார் கணவர்? எனக்கு ஏது கணவர்?'' என்றாள் அவள்.

சுவாமி! அவளை எங்கேயோ கடத்திச் சென்று மாந்திரீகம் செய்துவிட்டார்கள்.

'வந்திருப்பது நான்தான்; காளியம்மை என் மனைவிதான்;' என்று சகல விஷயங்களையும் தெரிந்துகொண்டு என் முன் வராமலேயே அதுவரை நடித்திருக்கிறாள் மோகனா.

மோகனாவின் வெற்றிப் புன்னகை என் நெஞ்சைச் சுட்டெரிப்பது போலிருந்தது. அவள் திட்டமிட்டேதான் இவ்வளவு வேலைகளையும் செய்திருக்கிறாள் என்பது புரிந்தது.

என் மாமனார்க்கு கூடக் கொஞ்சம் கோபம் வந்துவிட்டது.

''என்ன இது? ராத்திரியெல்லாம் எங்கோ கூட்டிக் கொண்டுபோய் வைத்திருந்து, இப்படி பைத்தியக்காரி மாதிரி கூட்டி வந்திருக்கிறீர்கள்? கட்டிய புருஷனைக்கூட, 'யார் எனக்குப் புருஷன்' என்று கேட்கும்படி பண்ணியிருக்கிறீர்கள்? இது நன்றாக இல்லை!'' என்றார் அவர்.

''நான் என்ன செய்வேன்? பீச் ரோட்டிலே தடுமாறிக் கொண்டு நின்றவளை நான்தான் போய்க் கூட்டி வந்தேன். இந்த வீட்டுக்கு வரமாட்டேன் என்று சொன்னாள்'' என் வீட்டில் படுக்க வைத்திருந்தேன். நல்லது செய்தால்கூட தப்பா?'' என்றாள் மோகனா.

''சரி. நல்லது. நாங்கள் இனி இந்த வீட்டில் இருக்கவில்லை. ஹோட்டலில் போய் ஒரு ரூம் எடுத்துக் கொள்கிறோம். காளியம்மை, எழுந்திரு!'' என்றார் என் மாமனார்.

''நான் எங்கேயும் வரமாட்டேன். மோகனா அக்காவோடுதான் இருப்பேன்!'' என்றாள் காளியம்மை.

''ஓகோ! மருந்து நன்றாக வேலை செய்கிறது. உன்னைச் சந்தி சிரிக்க விட்டுவிட்டு, நாங்கள் போய்விடுவோம் ஜாக்கிரதை!'' என்றார் மாமனார்.

''போனால் போங்கள். நான் வரமாட்டேன்!'' என்றாள் காளியம்மை.

''இவளை இப்படி விடக்கூடாது மாமா'' என்று சொல்லிவிட்டு, வெளியே போன நான், ஒரு டாக்சியைக் கொண்டு வந்தேன்.

உள்ளே சென்று அவள் கையைப் பிடித்துப் பரபர வென்று இழுத்து, டாக்சியில் ஏற்றப் போனேன்.

கீழே படுத்துக்கொண்டு சண்டித்தனம் செய்தாள். பேய் பிடித்தவள் போல் அலறினாள். என்னை மரியரதைக் குறைவாகப் பேசினாள். நான் விடவில்லை. வலுக்கட்டாயமாக டாக்சியில் ஏற்றி நானும் ஏறி உட்கார்ந்தேன்.

கதவைத் திறந்து கொண்டு கீழே குதிக்கப் போனாள்.

''நேரே மெண்டல் ஹாஸ்பிடலுக்கு விடு' என்றேன்.

காரில் அவள் பிசாசு மாதிரி கத்திக்கொண்டே வந்தாள்.

கார் நேரே கீழ்பாக்கம் மனநோய் மருத்துவ மனைக்குச் சென்றது.

டாக்டர் முன்னிலையிலும், அவள் சத்தம் போட்டாள்.

டாக்டரும் சந்தேகமில்லாமல் இது 'மெண்டல் கேஸ்' தான் என்றுமுடிவு கட்டிவிட்டார்.

இரண்டு மூன்று பெண் ஊழியர்களை விட்டு அவளைப் பிடித்துக் கொள்ளச் சொல்லி, கண்களைப் பரிசோதித்தார்.

அவள் செய்த ஆர்ப்பாட்டத்தில் அவள் கால்களுக்குச் சங்கிலிபோட வேண்டியும் வந்து விட்டது.

அவளை அங்கேயே சேர்த்துக்கொள்ளச் சொன்னேன்.

டாக்டரும் சேர்ந்துகொண்டு, தனியறையில் அடைத்துப் பூட்டினார்.

நான் நேரே ஆத்திரத்தோடு மோகனா வீட்டுக்கு வந்தேன்.

மோகனா ஒன்றும் அறியாதவளைப்போல் அங்கே உட்கார்ந்திருந்தாள். அவள் மட்டுமா? மோகன்லாலும்கூட!

கையில் இரண்டு கண்ணாடிக் கோப்பைகள் இருந்தன. அதில் விஸ்கி வழிந்து கொண்டிருந்தது.

சுவாமி! சாதாரணமாக நான் கோழை. இந்தச் சண்டி அன்றைக்கு மிரண்டு விட்டது. நேரே சென்று மோகனாவின் கன்னத்தில் ஒரு அறை அறைந்தேன்.

''அடி தேவடியாள் மகளே! காளியம்மையை என்ன செய்தாய்?'' என்று அவள் முடியை பிடித்தேன்.

மோகன்லாலுக்குப் இக்கட்டான நிலை. அவன் எழுந்து வெளியே போய்விட்டான்.

''சீ! என் முடியை விடு! அவள் என் வீட்டில்தான் படுத்திருந்தாள்; கூட உன் முதலாளியின் மகனும் படுத்திருந்தான், போதுமா?'' என்றாள் அவள்.

''அடிகேடு கெட்டவளே! நீ தான் தெரு நாய், சொறி நாய்! உன்னை சாராயக் குடிசையில் இருந்து பிடித்து வந்தேன். அவள் குடும்பப் பெண்ணடி, குடும்பப் பெண்'' என்று கத்தினேன் நான்.

''ம்! எல்லாக் குடும்பப் பெண்களையும் எனக்குத் தெரியும். நீபோடா வெளியே !'' என்று அவள், 'அடா' போட்டுப் பேசினாள்.

நான் கோபத்தோடு அவளை நையப் புடைத்தேன். அவளும் திருப்பி அடித்தாள்.

'' இனி நீ எத்தனை தவம் இருந்தாலும் காளியம்மை உன்னை நினைக்கப் போவதில்லை! அவள் புத்தியையே மாற்றியாகி விட்டது. உன்னை விவகாரத்து செய்து விட்டு உன் முதலாளியின் மகனைத்தான் அவள் கட்டிக் கொள்ளப் போகிறாள். நீ தெருவில் அலைய வேண்டியது தான்!'' என்றாள் அவள்,

நான் அங்கிருந்த பெரிய பாத்திரத்தை எடுத்து அவள் மீது வீசினேன். அது கட்டிலில் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையின் மீது விழந்தது.

குழந்தை உயிருக்கு மன்றாட ஆரம்பித்தது.

''ஐயோ! கொலை! கொலை! கொலை'' என்று அவ்ள் கத்தினாள்.

நான் குழந்தையை தூக்கப் பக்கத்தில் நெருங்கினேன்.

''சீ! அது உன் குழந்தையல்லடா பாவி ! '' என்றாள் அவள்.

என்ன சொல்வேன் சுவாமி? குழந்தை இறந்து போய்விட்டது. நான் கைது செய்யப்பட்டேன்.

இத்தனை சின்ன வயதில் எனக்கு எத்தனை துயரங்கள் பாருங்கள்!

'விதி விதி' என்கிறார்களே , அது தான் என்ன?

நாம் விரும்பாத பாதைகளில் எல்லாம் நடக்க வேண்டி வந்தால், அதன் பேர் தான் விதி.

நான் குளத்திலே குளிக்க விருப்பினேன்; குளத்தில் சேறுதான் இருந்தது.

நல்ல சாப்பாடு சாப்பிட விரும்பினேன்; நாற்றப் பொருள்தான் கிடைத்தது.

நான் வண்டியில் அமர்ந்து போக விரும்பினேன்; வண்டியை இழுக்கின்ற வேலைதான் கிடைத்தது.

அப்போது நான் தற்கொலை செய்து கொள்ள விரும்பினாலும் நடக்காது. காரணம், நான் சிறைச் சாலையில் இருந்தேன்.

அங்கு ரிமாண்டில் வைக்கப்பட்டிருந்த வகை வகையான கைதிகளில் நானும் ஒருவன்.

குலம் பாராமல் பிடித்த ஒருத்தி குப்பை மேட்டிலே; வம்சம் பார்த்துப் பிடித்த ஒருத்தி மனநோய் ஆஸ்பிடலிலே; வகையாக மாட்டக் கொண்டவன் சிறைச் சாலையிலே!

அங்கும் எனக்கு தாய் தகப்பன் ஞாபகம்தான் வந்தது.

''ஐயோ! அம்மா! அப்பா! என்னைப் பெற்றிருந்தபோதே கொன்று போட்டிருந்தால், இந்தப் பேதமையும் வேதனையும் இல்லையே'' என்று அழுதேன்.

தூத்துக்குடியில் இருந்து அப்பாவா வந்து எனக்காக வாதாடப் போகிறார்?

என் மாமனார் ஒரு உத்தமமான புண்ணியவான். மருத்துவமனையில் இருந்த மகளைக்கூடப் பார்க்கவில்லை. எனக்காக என் நண்பனின் உதவியுடன் வக்கீல் வைத்து வாதாடினார்.

அதன் விளைவாக ரிமாண்டுக் காலம் முடிந்த பதினைந்தாவது நாள் எனது ஜாமீன் மனு ஏற்றுக் கொள்ளப்பட்டது.

வெளியே வந்ததும் வராததுமாக மனநோய், மருத்துவ மனைக்குத்தான் நான் போனேன்.

தெரியாமலா ஞானிகள் எல்லாம் சொன்னார்கள் ஆசை, பாசம், பந்தம் இவற்றை அறுத்து விடும்படி

வீட்டில் ஒட்டிய ஒட்டடை, தொட்ட கையிலெல்லாம் ஒட்டுவதுபோல, அந்தப் பந்த பாசம் தானே என்னைச் சித்திரவதை செய்தது?

நம்பித் துணையிருந்த காளியம்மையும் தவறிவிட்டாள் என்று தெரிந்ததும், அவளைப் பார்க்க நான் ஓடுவானேன்?

இளம் இரத்தத்துக்கு விவஸ்தை கிடையாது, அது இயங்குகிறது; வீங்குகிறது ; துடிக்கிறது; துவளுகிறது; தான் ஏமாற்றப் பட்டதைக்கூட மறந்துவிடுகிறது.

அங்கே காளியம்மை அமைதியாக இருந்தாள்.

மாந்திரீகமும், மருந்தும் இறங்கி விட்டது போல் தோன்றிற்று.

என்னைப் பார்த்தவுடன் 'அத்தான்' என்றாள்; குமுறிக் குமுறி அழுதாள்.

திடீரென்று, " மோகனா அக்கா எப்படி இருக்கா...?" என்று கேட்டாள்.

எனக்குச் சிரிப்பு வந்தது.

டாக்டரைக் கேட்டேன்.

" சுயநினைவு வருகிறது, போகிறது; நிலையாக இல்லை" என்றார்.

"இதற்கு என்ன செய்யலாம்?" என்றேன்.

" எங்கேயாவது மலைவாச ஸ்தலத்துக்குப் போய் வாருங்கள்" என்றார்.

கோர்ட்டிலே வழக்கை வைத்துக் கொண்டு நான் எப்படி மலைவாசஸ்தலம் போவது? அதற்கான வசதிகள் தான் ஏது?

இப்போது காளியம்மையைக் கூட்டிக் கொண்டு போனாலும் எங்கே கொண்டு போய் வைப்பது?

லட்சுமி அம்மாள் வீட்டில் வைக்க முடியாது.

முதலாளி வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போகலாமா?

முதலாளி மகனிடம் தானே காளியம்மையை மோகனா அனுப்பி இருக்கிறாள்?

நான்கு சாலைகள் சந்திக்கும் இடத்தில் நின்று கொண்டு, எந்த ஊருக்குப் போவது என்று தடுமாறுகிறவனைப் போல நான் ஆகிவிட்டேன்.

ஏதாவது ஒரு ஹோட்டலில் கொண்டுபோய் வைக்கலாமா?

சித்தபிரமை பிடித்தவளைத் தனியாக எப்படி வைப்பது?

பேசாமல் ஊருக்குப் போய் விடுவதே நல்லது போல் தோன்றிற்று எனக்கு.

ஊரிலே கொண்டு போய் காளியம்மையை விட்டு விட்டு, திரும்பி வந்து விடலாம் என்றும் கருதினேன்.

பாதை தெரிந்தால் பயணம் போகலாம்; எது பாதை என்று தேடுகிற நிலையல்லவா, எனது நிலை?

நான் யோசித்துக் கொண்டிருக்கும் போதே காளியம்மையை டிஸ்சார்ஜ் செய்து விட்டார், டாக்டர்.

நானும் பிரக்ஞை இல்லாமல் ஒரு டாக்சி எடுத்துவிட்டேன்.

என்னென்னவோ யோசித்து, கடைசியில் லட்சுமி அம்மாள் வீட்டுக்கே வந்து சேர்ந்தோம்.

என் வேலைகளை யெல்லாம் விட்டுவிட்டு அவள் அருகிலேயே நான் காவலிருந்தேன்.

அன்று இரவு எல்லோரும் தூங்கிக் கொண்டிருக்கும் போது, மெதுவாக எழுந்து கதவைத் திறந்து கொண்டு வெளியேறினாள், காளியம்மை.

நல்ல தூக்கத்தில் நான் இதைச் சரியாகக் கவனிக்கவில்லை.

மறுநாள் பொழுது விடிந்தது போதுதான் அவள் காணாமல் போனது தெரிந்தது.

மோகனா வீட்டுக்குள் மீண்டும் நான் எப்படிச் செல்வது?

அங்கே அவள் இருக்கக்கூடும். யாரைக் கொண்டு அதை விசாரிப்பது?

லட்சுமி அம்மாளை அனுப்பலாமா?

''சேச்சே எனக்கு இதுதான் வேலையா...?'' என்று அவர்கள் கேட்டு விட்டால்....?

நேரே அரண்மனைக்காரன் தெரு நண்பனிடம் சென்றேன்.

நடந்தவற்றை யெல்லாம் சொல்லி அழுதேன்.

அவனுக்கு என்னைப் பார்க்கவே பரிதாபமாக இருந்திருக்க வேண்டும்.

'இப்படி ஒரு ஜென்மம் இடைவிடாது துன்பப்படுகிறதே' என்று கருதி இருக்க வேண்டும்.

எனக்காக அவன் மீண்டும் சாமியார் வேஷம் போட்டான்.

இப்போது நான் இந்த வேஷம் போடவில்லை. வேஷம் போடுகிற நிலையிலா நான் இருந்தேன்?

கேட்டால் சிரிப்பார்கள்! கேலிப் பிழைப்பு

நண்பன் அங்கே போய்த் திரும்பி வரும் வரையில், நான் அவன் அறையிலேயே இருந்தேன்.

அந்தச் சாமியார் புறப்பட்டார்.

அங்கே என்ன நடந்ததாம்?

அவள் பாசங்காட்டி, பரிவு காட்டி, அவனை உள்ளே அழைத்துச் சென்றாளாம்.

தன் குழந்தை இறந்து போனதைச் செல்லி 'கோ' வென்று அழுதாளாம்.

''என்னைப் போன்ற உத்தமமான பெண்ணுக்கு இப்படியெல்லாம் வரலாமா சுவாமி?'' என்று கேட்டாளம்.

''பயப்படாதே! எவன் உனக்கு இந்தத் துரோகம் செய்தானோ, அவனுடைய குடும்பத்தைத்தான் நீ பிரித்து விட்டாயே? அந்தக் குடும்பம் இனிச் சின்னா பின்னந்தான் ! ஏன் கவலைப்படுகிறாய்?'' என்றானாம்.

''அந்த விபரம் உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டாளாம்.

'' என் ஞானதிருஷ்டியில் உணர்ந்தேன்! '' என்றானாம்.

''அதனால் எனக்கொன்றும் பாவம் வராதே...'' என்று கேட்டாளாம்.

''ஒரு பாவத்துக்கு மற்றொரு பாவம்தான் பரிகாரம்'' என்றானாம் நண்பன்.

அவள் மோர் கொண்டு வர உள்ளே சென்றாளாம்.

அவன் வீடெங்கும் சுற்றிப் பார்த்தானாம். காளியம்மை இல்லையாம்.

''காளியம்மை இருந்திருந்தால் சத்தமாவது கேட்டிருக்குமே...?'' என்றான் அவன்.

'' பின் எங்கே போயிருப்பாள்? இவ்வளவு பெரிய செ ்னை நகரத்தில் எப்படிக் கண்டுபிடிப்பது?''

இந்தக் கவலையில் நான் வேலைக்கும் செல்லாமல் இருந்து, வேலையும் போய்விட்டால், சோற்றுக்கு அலைய வேண்டி வருமே?

'ஏதோ கடவுள் விட்ட வழி' என்று, நான் அலுவலகத்துக்குச் சென்றேன்.

தாளமுடியாத துன்பத்தில் உள்ள ஒருவனை, மாளிகையில் கொண்டு போய் வைத்தாலும், அந்த மாளிகையும் அவனுக்குச் சுடுகாடாகவே காட்சியளிக்கும்.

பைத்தியம் பிடித்தவனைப்போல் அலுவலகத்தில் இருந்தேன்.

லட்சுமி அம்மாள் வீட்டுக்கு டெலிபோன் செய்து மாமனாரோடு பேச முயன்றேன்.

பாவம், அவர், வீட்டை விட்டுப் போனவர் திரும்பி வரவே இல்லையாம்.

இரண்டு மூன்று நாட்கள் சோறும் செல்லாமல், தூக்கமும் பிடிக்காமல் உழன்றேன்.

அந்த மோகனாவையும் கழுத்தை நெரித்துக் கொன்று விடலாமா என்று தோன்றிற்று.

ஏற்கனவே ஒரு கொலைக் குற்றம் இருக்கிறது.

கொலை ஒன்றானாலென்ன இரண்டானால் என்ன?

ஆத்திரக்காரனுக்கு ஊரையே கொளுத்தலாமா என்று தோன்றும். ஆனால் அதற்கு சக்தி இருந்தால் தானே?

இந்த நிலையில், கோர்ட்டுக்கு வாய்தாவுக்கு வேறு போக வேண்டியிருந்தது.

இப்பொழுதெல்லாம் முதலாளியின் மகன், மிகுந்த உற்சாகமாக இருந்தான்.

அவனது முகமே களைகட்டிக் கொண்டிருந்தது.

ஒரு நாள் அவன் என்னைப் பார்த்து, '' மத்தியானம் ஒரு சில்க் எம்போரியத்திலிருந்து கடையில் பார்சல் கொண்டு வந்து கொடுப்பார்கள். அதை இந்த விலாசத்துக்குக் கொண்டு வந்து விடு'' என்று, ஒரு விலாசத்தை எழுதிக் கொடுத்தான்.

''சரி'' என்று வாங்கிக் கொண்டேன்.

மதியம் ஒரு பெரிய பார்சலும் வந்து சேர்ந்தது.

அதை எடுத்துக் கொண்டு, அவன் சொன்ன அடையாறு விலாசத்துக்குப் போனேன்.

அது ஒரு தனி பங்களா, வெளியிலேயே பளிங்குக் கற்கள் பதித்திருந்தார்கள்.

காலிங் பெல்லை அழுத்தினேன்.

ஒரு வேலைக்காரன் வந்து கதவைத் திறந்தான்.

''ஐயா இருக்கிறாரா'' என்று கேட்டபடி உள்ளே பார்சலோடு சென்றேன்.

ஐயா, பனியனோடு வியர்க்க விறுவிறுக்க உள்ளே இருந்து எழுந்து வந்தான்.

பின்னாலே கலைந்த தலையோடு ஒரு பெண்ணும் வந்தாள்.

சுவாமி ! நான் மூர்ச்சை போட்டு விழவில்லை. என் உயிர் போய் விடவும் இல்லை.

அவள்தான் காளியம்மை!

என்னைப் பார்த்ததும், தெரிந்தது போல் அவள் காட்டிக் கொள்ளவில்லை.

''அம்மா, சேலையை வாங்கிக் கொள்ளம்மா!'' என்றான் முதலாளி மகன், அவளைப் பார்த்து.

நான் கை கால்கள் நடுங்க, அதை அவளிடம் கொடுத்தேன்.

சாதாரணமாக அதை அவள் வாங்கிக் கொண்டாள்.

அப்போதுதான் அவள் கழுத்தைக் கவனித்தேன்.

கழுத்தில் கருப்புக் கயிற்றில் ஒரு தாயத்துக் கட்டியிருந்தாள்.

''சரி, நீ, போ! '' என்றான் முதலாளி மகன் என்னைப் பார்த்து.

என் மாங்கல்யம் ரவிக்கைக்குள் மறைந்து கிடந்தது; தாயத்து வெளியே கிடந்தது. கண்ணீர் அதை மறைத்தது; வெளியேறினேன்.

'எந்தத் தெருவில் நடக்கிறோம்? எங்கே போகிறோம்?' என்று தெரியாமல் புறப்பட்டேன்.

எனக்குச் சிரிப்பு வந்தது. அழுகை வந்தது.

ஒரு மனிதன் தனியாக அழுதால் ஊர் பரிதாபப்படும். தனியாகச் சிரித்தால் சந்தேகப்படும்.

எனக்கு அலுவலகத்துக்குப் போவதற்கு ஆசை வரவில்லை. மடி ஏந்திப் பிச்சை வாங்கியாவது சாப்பிடலாம் என்று முடிவு கட்டினேன். கால் போன போக்கெல்லாம் போனேன்.

திடீரென்று ஒரு மரத்தடியில் உட்காருவேன். எனக்குள் நானாகவே பேசிக் கொள்வேன்.

'போடா, போ!' என்பேன். 'கழுதை போகட்டும்' என்பேன். திடீரென அழுவேன்.

கடைசியில் கோவிலுக்காவது போகலாம் என்று புறப்பட்டேன்.

பார்த்த சாரதி கோவிலில் நின்று பிரசாதம் வாங்கினேன். அதுதான் அன்றையச் சாப்பாடு.

சுவாமி! நம்முடைய மூதாதையர்கள் மனைவியால் வஞ்சிக்கப் பட்டவர்களுக்காகவே கோவில் கட்டி வைத்திருக்கிறார்கள்.

ஒரு தெப்பக் குளத்தில் குளித்தேன். ஈர வேட்டியோடு அலைந்தேன்.

பிச்சைக்காரர்கள் கை நீட்டிப் பிச்சை கேட்பதைப் பார்த்தேன்.

மயிலை, கபாலீஸ்வரர் கோயிலுக்கு முன்னால் நின்று கொண்டு, நானும் கை நீட்டத் தொடங்கினேன்.

அப்போது ஒரு வேடிக்கை நடந்தது சுவாமி!

முதலாளியின் மகனும், காளியம்மையும் காரில் வந்து இறங்கினார்கள்.

நான் கண்களை மூடியபடி, குருட்டுப் பிச்சைக்காரனைப் போல், அவர்களிடம் கை நீட்டினேன்.

காளியம்மை என் கையில் இரண்டு ரூபாயை வைத்தாள்.

அவர்கள் போன பிற்பாடு, அந்த ரூபாயைப் பார்த்தேன். அதில் என் தாய் தகப்பன் முகம் தெரிந்தது.

நிச்சயமாக, காளியம்மை சுய உணர்வில் இல்லை என்பது எனக்குத் தெரிந்தது.

சாதாரணமாக மருந்து வைப்பது, மாந்திரீகம் செய்வது, பில்லிசூன்யம் -இவற்றை நான் நம்ப மாட்டேன்.

ஆனால், காளியம்மை நடந்துகொண்ட முறையில் இருந்து, இது மருந்து செய்யும் வேலைதான் என்பது எனக்கு நன்றாகத் தெரிந்தது.

நான் என்ன செய்ய முடியும்?

கோர்ட்டுக்குப் போய், என் மனைவியை என்னிடம் ஒப்படைக்கும்படி வழக்குப் போட முடியுமா?

அவள் இருக்கும் நிலையில், அவளே வந்து மனைவி இல்லை என்பாளே!

முதலாளியின் மகனிடம்போய், 'என் மனைவியைக் கொடு!' என்று கேட்கலாமா?

இனி அவள் வந்து என்ன? வாழ்ந்து என்ன?

அவளது உடம்பையும் வேறொருவன் பார்த்தாகிவிட்டது.

சென்னை நகரத்துத் தெருக்களை என் கால்களால் அளந்தேன்.

சாலைகளில் கணவனும் மனைவியும் சிரித்துக் கொண்டு போவதைப் பார்த்தால், கடவுள் எனக்களித்த தண்டனையைப் பற்றிக் கவலைப் படுவேன்.

ஒரு நாள் ஒரு கடையருகில் ஒரு போஸ்டர் தொங்கிற்று.

'கடலில் விழுந்து தற்கொலை!' என்றிருந்தது அதில்.

பத்திரிகை வாங்கக் கையில் காசில்லை.

அங்கு படித்துக் கொண்டிருந்த ஒருவர் பக்கத்தில் போய் நின்று, மெதுவாகப் பார்த்தேன்.

'அடையாளம் தெரியாத பிணம்!' என்று தலைப்புப் போட்டு, என் மாமனார் இறந்து கிடக்கும் படம் போட்டிருந்தது.

நேரே போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடினேன். 'என் மாமனார் தான் அது!' என்று கதறினேன். 'அவர்களது பிள்ளைகள் யாரையாவது கூட்டி வாருங்கள்.' என்று கூறி விட்டார்கள்.

தூத்துக்குடிக்கு நான் எப்படிப் போவேன், எப்படி கூட்டி வருவேன்?

கடைசியில் போலீசாரே அவரை அடக்கம் செய்து விட்டார்கள்.

'படமுடியா தினித்துயரம் பட்டதெல்லாம் போதும்' என்றானே, அவன் என்னை விடவா துன்பப் பட்டிருக்கப் போகிறான்?

இப்போதெல்லாம் பரதேசிகள், பிச்சைக்காரர்களோடு தான் எனக்குச் சிநேகம்.

பிச்சை எடுத்துச் சாப்பிட்டுக் கோவில் மண்டபங்களிலே தான் தூங்கினேன்.

அதிலே ஒரு இளம் சந்நியாசி எனக்கு நண்பனாக வாய்த்தான்.

''மனைவி இருக்கும் ஊரிலேயே நீயும் இருந்தால், மனதுக்கு நிம்மதி கிட்டாது, வா, வடக்கே போய் விடலாம்,'' என்று கூப்பிட்டான்.

நானும் தயாராகி விட்டேன். ஆனால், ஏதோ ஒரு சபலம், போவதற்குள் ஒரு முறை காளியம்மையைப் பார்த்து விட்டுப் போக வேண்டும் போல் தோன்றிற்று.

நேரே காளியம்மை வீட்டுக்குச் சென்றேன். அப்போது மணி, பதினொன்று

அவளே வந்து கதவைத் திறந்தாள்.

''என்ன சுவாமி, என்ன வேண்டும்?'' என்றாள்.

நான் சுவாமியாம்!

''உன் கையால் ஒரு பிடி அரிசி கொடு,'' என்று கேட்டேன்.

அவள் உள்ளே போய் எடுத்து வந்து கொடுத்தாள்.

''கொஞ்சம் பால் கொடு,'' என்றேன். கொடுத்தாள்.

கண்ணீரோடு விடை பெற்றேன்.

மறுநாள் கோர்ட்டிலே வாய்தா.

என் நண்பன் வைத்த வக்கீல்தான் ஆஜரானார்.

சில பூர்வாங்க ஆட்சேபணைகளைக் கிளப்பினார்.

கோர்ட் அதை ஏற்றுக் கொண்டு வழக்கைத் தள்ளுபடி செய்தது.

புது வழக்குப் போடும்படி போலீசாருக்குக் கூறிற்று.

'தீமையில் ஒரு நன்மை' என்று கருதி நான் அங்கு நிற்காமல் ஓடிவிட்டேன்.

அந்த இளம் சந்நியாசியை அழைத்துக் கொண்டு கால்நடையாகப் புறப்பட்டேன்.

வழியில் மோகனாவும், மோகன்லாலும் காரில் திருப்பதிக்குச் செல்வதையும் பார்த்தேன்.

திருப்பதிக்குப் போகாமல், காளஹஸ்திக்குப் போனேன்.

அங்கே ஒரு புண்ணியவான் எனக்கு உதவினார்.

அந்த இளம் சந்நியாசிதான் ராமானந்தா.

நானும் அவனும் புறப்பட்டு இங்கே வந்தோம். சுவாமி!

இதுதான் நடந்த கதை!''

- என்று முடித்தான் கிருஷ்ணானந்தா.

## 9

சுவாமி சகஜானந்தா கொஞ்ச நேரம் அமைதியாகவே இருந்தார். பிறகு பேசத் தொடங்கினார் :

''தம்பி, நதியின் போக்கையே விதி பல தடவை மாற்றி விடுகிறது. எந்த ஜென்மத்தில் செய்த பாவமோ இப்போது எதிரொலிக்கிறது. பெண்கள் பனிக்கட்டியைப் போன்றவர்கள். காமவெப்பத்தில் அவர்கள் உருகி விடுகிறார்கள். நம்பிக்கைக்குரிய ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்து அவளோடு நல்வாழ்க்கை நடத்துபவன் கூட, வேறு பல துன்பங்களால் விரக்தியடைந்து விடுகிறான். இல்லறத்தின்

துயரங்களை உணர்ந்தவர்கள் தானே. துறவறம் என்ற ஒன்றைக் கண்டு பிடித்தார்கள். இதுவே சிக்கலில்லாத அறம்.

''ஆனால், கல்லூரிக்கு வந்து விட்டவன் பள்ளிக்கூடத்தில் விட்டு வந்த புத்தகங்களையே எண்ணிக் கொண்டிருக்கக் கூடாது.

''கேணி எவ்வளவு அழகாக இருந்தாலும், அதிலே படகுவிட முடியாது. சமுத்திரத்துக்கு வந்து விட்ட பிறகு, கேணியைப் பற்றி நினைக்கக் கூடாது.

''போன வயது எப்படித் திரும்பாதோ, அப்படியே நடந்து போன நிகழ்ச்சிகளும் மாற்ற முடியாதவையே.

''அவற்றை முழுக்க மறந்துவிட்டு, மிச்சமுள்ள காலத்தைத் தெய்வ வழிபாட்டில் செலவு செய்.

- என்றார், சகஜானந்தா.

## 10

பொழுது நன்றாக விடிந்து விட்டது.

தூரத்தில் எங்கிருந்தோ ஒரு பாட்டுச் சத்தம் கேட்டது.

அந்தக் குரல் கிராமிய மொழியில் பாடிற்று.

அது ஒரு ஒப்பாரி போலவும் இருந்தது.

பழக்கப்பட்ட குரல் போலத் தோன்றிற்று, கிருஷ்ணானந்தாவுக்கு.

சுவாமி சகஜானந்தாவை அழைத்துக் கொண்டு, கிருஷ்ணானந்தா குரல் வந்த இடத்துக்குச் சென்றான்.

அங்கே ஒரு டூரிஸ்ட் பஸ் நின்று கொண்டிருந்தது.

அதிலிருந்து ஏராளமான ஆண்களும், பெண்களும் இறங்கிக் கீழே நின்றார்கள்.

இரண்டு சாமியார்களைக் கண்டதும் எல்லோரும் அவர்கள் கால்களில் வந்து விழுந்தார்கள்.

சகஜானந்தா எல்லோருக்கும் விபூதி கொடுத்தார்.

காவியுடை தரித்து, துளசி மாலை அணிந்திருந்தாள் ஒரு பெண். அவள் கிருஷ்ணானந்தாவின் காலில் விழுந்து வணங்கினாள்.

தன் மடியில் கட்டி வைத்திருந்த அவள் கொடுத்த அரிசியை அப்படியே அவிழ்த்தெடுத்து அவள் கையில் கொடுத்தான், கிருஷ்ணானந்தா.

''இந்தப் பாவிக்கு இதுதான் ஆசீர்வாதமா?'' என்று கேட்டாள், அவள்.

''அறியாமல் செய்த பாவத்திற்கு அரிசிதான் பிரசாதம்!'' என்றான் அவன்.

அதைப் பெற்றுக் கொண்ட காளியம்மை கூட்டத்தோடு நடந்தாள்.

கிருஷ்ணானந்தா ஒரு பெருமூச்சு விட்டான்.

# கவியரசர் கண்ணதாசனின் நாவல்கள்

| | |
|---|---|
| அவள் ஒரு இந்துப் பெண் | 18.00 |
| சிவப்புக்கல் மூக்குத்தி | 21.00 |
| ரத்த புஷ்பங்கள் | 15.00 |
| அவளுக்காக ஒரு பாடல் | 15.00 |
| முப்பது நாளும் பௌர்ணமி | 36.00 |
| கடல் கொண்ட தென்னாடு | 54.00 |
| அரங்கமும் அந்தரங்கமும் | 52.00 |
| ஆயிரம் தீவு அங்கயற்கண்ணி | 51.00 |
| ஸ்வர்ண சரஸ்வதி | 18.00 |
| சுருதி சேராத ராகங்கள் | 16.00 |

